# பொருளடக்கம்



---



தேம்பாவணி, சதுரகராதி இயற்றிய

**வீரமாமுனிவர்**

(FATHER C. J. BESCHI)

(கஅசூ0—களசஉ)




சிலம்பு-கடு] தாது—மாசி [பரல்-எ

## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள் கடிம்மதிற்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.

பதவுரை:—

விழுமியார்கள்—மெய்யுணர்வில் நிலைபெற்றுநிற்கிற மெய் அடியார்கள்

நின்கழல்பாட வாயிலாய்—உனது இரண்டு திருவடிகளையும் புகழ்ந்து பாடுதலாகிய வழியில்

பரவநின்ற பண்பனே—துதிக்கும்படி நிலைபேறுயுள்ள எண்குணங் களையும் உடையவனே

வீடுஅலால் அவாஇலாய்—(அத்தகை அடியார்களுக்கு) மேலான வீட்டின்பமல்லாது அதற்குக் கீழாயுள்ள பிறிதொரு பேற் றினையும் கொடுக்க விருப்பமில்லாதவனே

காடுஅலால் அவாஇலாய்—நீ சுடுகாடல்லாமல் பிறிதோரிடத்திலும் தங்கியிருத்தற்கு விருப்பமில்லாதவனே

கபாலீ—நான்முகனுடைய உடைந்த தலைஓட்டில் இரந்துண்கின்ற வனே

கடிநீள்மதில் கூடல்—காவலையுடைய நீண்ட மதில்களாற் சூழப்பட்ட கூடல் என்னும் மதுரைப்பதியிலுள்ள

ஆலவாய்இலாய் குலாயது—ஆலவாய் என்னும் திருக்கோயிலை நீ இருக்கும் வீடாகக்கொண்டு மகிழ்ந்து வீற்றிருத்தல்

என்னகொள்கை—என்ன கருத்துக்கொண்டோ? அதனை நீ எனக்குச் சொல்வாய்!

விளக்கவுரை:—

விழுமியார்கள்—விழுமம் என்பது சிறப்பு—சிறப்பு ஆகிய வீட்டினை அடைதற்குரிய மெய்யுணர்வினை நிலையாக உடையவர்கள் உண்மை அடியார்கள் ஆதலின், அடியார்களை விழுமியார்கள் என்று அடிகள் கூறினார்.—31-வது குறட்பாவில் வருகிற சிறப்பு என்ற சொல்லுக்கு வீடு என்று பரிமேலழகர் உரை கூறியிருத்தல் காண்க.

கழல்—என்பது கால்களில் அணியப்படும் வீரஅணி என்று பொருள் படும். அஃது இங்கே ஆகுபெயராய் அவ்வணி அணியப்படுகிற கால்களைக் குறிக்கின்றது.

பாடல் வாயிலாய் பரவநின்ற பண்பனே—பாடல்—சமய ஆசிரியர்கள் நால்வர்களும் சிவபெருமானைப் பாடிய பாடல்களைப்போன்ற பாடல்கள்—ஆல், அ—இரண்டும் அசைகள்.

சிவபெருமான் பல வழிகளில் அடியார்களால் துதிக்கப்படுதலின் இங்கே பாடல் வழியாய் என்று அடிகள் கூறினார். சிவபெருமான், அடியார்கட்கு வீட்டின்பமளித்தற்கு அவர்களிடம் தனது எண்குணங்களையும் பதியச் செய்தலால் "பரவநின்ற பண்பனே" என்றார்.

வீடுஅலால் அவாஇலாய்—உண்மையை வலியுறுத்த அடிகள் எதிர் மறையாற் கூறினார். அல்லாய் என்பது அலாய் என்றும் இல்லாய் என்பது இலாய் என்றும் இடையில் லகர ஒற்றுக்கள் தொக்கி நின்றன. இவ்வாறு தொக்குநிற்றலை மூன்றும் அடியில் வருகிற அலால்—இலாய் என்பவனவற்றுக்கும் கொள்க. வீடு என்ற சொல் இங்கே ஆகுபெயராய் வீட்டின்பத்தைக் குறிக்கிறது. வீட்டின்பத்துக்கு மேலான பேறு ஒன்றுமில்லையாதலானும், மெய்யுணர்வுடைய அடியார்கள் பிறிதொரு பேற்றினையும் விரும்பார் ஆதலானும் அடிகள் வீடலால் அவாயிலாய் என்றார். "வீடுதனை மெய்யடியார்க் கருள்செய்வானும்" என்று திருநாவுக்கரசு அடிகள் திருவெண்ணித் தாண்டகம் 6 வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. அவா—விருப்பம்.

காடுஅலால் அவாஇலாய்—காடு என்பது சுடுகாடு—உலகமெல்லாம் அழிக்கப்படுகின்ற சர்வசங்கார காலத்தில் சிவபெருமான்

எல்லா மாயா காரியப்பொருள்களையும் அழித்து நடனம் செய்கின்ற இடம் இங்கே சுடுகாடு எனக் கூறப்பட்டது.

கபாலி—கபாலம் என்பது உடைந்த தலையோடு; கபாலத்தை (க்கையில்) உடையவன் கபாலி. சிவபெருமான் நான்முகனுடைய அஞ்சு தலைகளிலொன்றைக் கிள்ளி அத்தலையோட்டில் பிச்சை எடுக்கிறதாகச் சிவபுராணங்கள் கூறுதலால் சிவபெருமான் கபாலி என்று கூறப்பட்டான்.

கூடல் ஆலவாய் இலாய்க் குலாயது—கூடல் என்பது மதுரைப்பதியைக் குறிக்கிறது. இது காரணப்பெயராய் வழங்கப்படுதலுக்குத் திருவிளையாடற் புராணம் நான்மாடக்கூடலான படலம் பார்க்க.

ஆலவாய் என்பது அப்பதியிலுள்ள திருக்கோயிலின் பெயர்.

இல் என்பது வீடு. வசிக்கும் இடம் இல்லாய் என்பது இலாய் எனநிற்றல் தொகுத்தல் விகாரம்.

குலாயது—குலாவியிருத்தல், அஃதாவது, மகிழ்ந்து வீற்றிருத்தல்; தொழிற்பெயர்.

என்ன கொள்கையே (சொல்வாய்)—கொள்கை என்பது கொள்ளப்பட்ட கருத்து—மக்கள் குடியிராத சுடுகாட்டி லிருந்துகொண்டு நான்முகனுடைய தலையோட்டில் பிச்சை எடுத்துண்பவனாகிய நீ, மக்கள் நெருங்கி வாழும் மதுரைப்பதியிலுள்ள அரண்மனை போன்ற பெரிய கோவிலில் உமாதேவியோடுங்கூடி மகிழ்ந்து வீற்றிருத்தலுக்கு உனது கருத்து என்ன என்று சிவபெருமானைக் கேட்கும் கேள்வியாக நகைச்சுவைபட அடிகள் கூறினார்—அக்கேள்வியிலேயே ஆன்மாக்கள் பொருட்டுச் சர்வசங்காரத் தொழிலாகிய உனது கடன் செய்தற்கு நீ சுடுகாட்டி; லிருந்துகொண்டு நடனம் செய்தாய் என்ற விடையும்; அந்த ஆன்மாக்களே உன்னை வந்து வணங்கி உலகபோகத்தையும் வீட்டின்பத்தையும் பெற்று உய்யும்படி ஆலவாயில் வீற்றிருக்கிறாயென்ற விடையும் குறிப்பாலுணர்த்தப்பட்டன. ஆன்மாக்கள் உய்யும்பொருட்டே, சுடுகாட்டில் வீற்றிருந்த நீ ஆலவாயிலும் வீற்றிருக்கின்றாய் என்பது கருத்து. அடிகள் பாடியருளிய,

மண்ணி னல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணி னல்ல கதிக்கி யாதுமோர் குறைவிலைக்

கண்ணி னல்லஃ துறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணி னல்லா ளொடும் பெருந்தகை யிருந்ததே.

என்ற பாட்டில் இக்கருத்துக் கூறப்பட்டது. இப்பாட்டு 3-4-ஆம் அடிகளிற் கூறப்பட்டிருக்கிற கருத்தை அடிகள் திருநள்ளாறும் திருவாலவாயும் என்ற பதிகம் (7—1) முதலாவது பாட்டிலுங் கூறியருளினமை காண்க. அது வருமாறு:—

பாடகமெல்லடிப் பாவையொடும் படுபிணக்காடிடம் பற்றிநின்று
நாடகமாடு நள்ளாறுடைய நம்பெருமானிது வென்கொல் சொல்லாய்
சூடகமுன்கை மடந்தைமார்கள் துணைவரொடுந் தொழுதேத்திவாழ்த்த
ஆடகமாட நெருங்குகூட லாலவாயின்க ணமர்ந்தவாறே.

ஈற்றிலுள்ள ஏ அசை. சொல்வாய் என்பது ஈற்றில் சொல்லெச்சமாய் வந்தது. நான்காவது அடியில் கூடலாலவாயிலாய் என்று வருதல்பற்றி முதலாவது அடியில் வீடலாலவாயிலாய் என்பதிலும் மூன்றாவது அடியில் காடலாலவாயிலாய் என்பதிலும் வகர உடம்படு மெய்க்குப்பதிலாக யகர உடம்படுமெய் வந்தது. 'மாயிருஞாலம்' என்பதில் ஆகாரவீற்று உரிச்சொல்லின் முன் யகரவுடம்படுமெய் வருதல் காண்க.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை.



அவனே இவனே யென்று ஆயிரம் உழைப்பதிலும்
சிவனே சிவனே யென்றூற் சேரலாம் சிவகதிக்கே.

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## குறுந்தொகை

மூலமும் விளக்க உரையும்
[இலந்தையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]
(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### குறிஞ்சி

*தலைவன் மணந்துகொள்ளாமல் களவொழுக்கத்தி னிடையே ஒருவழித்தணந்த காலத்தில் தலைவி ஆற்றாது வருந்தித் தோழிக்குக் கூறியது.*

கபிலர் பாடியது

38. **கான மஞ்ஞை யறையின் முட்டை**
**வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்**
**குன்ற நாடன் கேண்மை என்றும்**
**நன்றுமன் வாழி தோழி யுண்கண்**
**ணீரோ டொராங்குத் தணப்ப**
**உள்ளா தகறல் வல்லு வோர்க்கே.**

*என்பதுவரைவு நீட்டித்த வழித் தலைமகள் தனது ஆற்றாமை தோன்றத் தோழிக்குக் கூறியது.*

பதவுரை :—

*வாழி—; தோழி—தோழியே; கான மஞ்ஞை முட்டை காட்டிலுள்ள மயிலின் முட்டையை, வெயிலாடு முசுவின் குருளை—வெயிலில் விளையாடும் குரங்குக்குட்டி, அறையின் உருட்டும்—கற்பாறையை யுருட்டுவதுபோல் உருட்டுகின்ற, குன்ற நாடன் கேண்மை—மலை நாட்டை யுடையவனது நட்பு, என்றும் நன்றுமன்—என்றும் பெரிதாயிருந்தது; (இதுகாலை கழிந்தது) (அவர் ஒருவழித் தணந்திருப்ப) உண்கண் நீரோடு ஓராங்குத் தணப்ப—மையுண்ட கண்கள் நீரைச்சொரிய ஒரு புறம் நீங்காத்துயரோடு வருந்தக் கைவிட்ட, உள்ளாது அகறல் வல்லுவோர்க்கு—நினைக்காமல் நீங்குதலில் வல்லவராகிய தலைவர்க்கு; என் துயர் கூறுவார் ஒருவரும் இலையே.*

மஞ்ஞை மயில். முசு—குரங்கு. முசுவின் குருளை மஞ்ஞை முட்டையை அறையின் உருட்டும் என்க. அறையின்—இன் ஐந்தாம் வேற்றுமையுருபு ஒப்புப் பொருளில் வந்தது. மன்-இடைச்சொல். வாழி, அசை நிலையாகவந்த சொல்லுமாம். உண்கண்—மையுண்கண்—வினைத்தொகை அறை—கல். ஓராங்குத் தணப்ப—ஒருவழித் தணத்தல். "அகறல் வல்லுவோர்க்கு என்செய்தி கூறுவார் இலையே" என்பது சொல்லெச்சம். நீரோடு வருந்த என்று 'வருந்த' என்பதைச் சொல்லெச்சமாகக் கொள்ளவும்.

ஒருவழித் தணத்தலாவது: தலைவன் களவொழுக்கத்திலே தலைவியோடு கூடி ஒழுகிவருகையில் அக்களவு வெளியாகி ஊரில் அலர் எழுந்ததைத் தோழியா லுணர்ந்து அவ்வலர் அடங்குமட்டும் தலைவியை விட்டுப்பிரிந்து தனித்து ஓரிடத்தில் சிலநாள் தங்கியிருத்தல்.

மேற்கோள் விளக்கம் :—

"வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்
குன்ற நாடன் கேண்மை."

என்றாற்போல முசுவிற்குங் குருளைப் பெயர்கொடுக்க"

—(தோல்—மாபு. பக் 538, 541)

மயில் தானாகக் கூடுகட்டிக் கொள்ளாமல், நெருக்கமான புதர்களிடத்தும், வேலிக்கால்களிலும் முட்டையிடும். தனக்குக் கூடு இல்லாமையால் அது மரக்கிளையில் உறங்கும். அறையில் முட்டை என்பதற்குப் பாறையை இல்லாக வுடைய முட்டை எனலுமாம். முசு ஒரு வகைக் குரங்கு.

நன்று—பெரிது. "நன்று பெரிதாகும்"

—(தோல்-சொல்-உரி. 45)

"கான மஞ்ஞை.........குன்றநாடன்"—இதனோடு,

"வந்தாய் பவரையில்லாமயின் முட்டை யிளையமந்தி
பந்தாடிரும் பொழிற் பல்வரை நாடன்"—(திருக்கோவை-276)

என்பதோடு ஒப்பிட்டுக்காண்க.

உள்ளுறை: "மறைவிடத்தில்லா மயின் முட்டையை ஈனும்பொழுது உள்ளதாகிய துன்பத்தை யறியாத முசுக்குருளை மயிலின் வருத்தத்தையும் முட்டையின் மென்மையையும் கருதாது உருட்டுமாபோல, காதலர் கருத்தில் வைக்கப்படாத எனது காமத்தை, நீ இத்தகைத்தென்று உற்றுணராமையால், என் வருத்தத்தையும் காமத்தின் மென்மையையும் கருதாது உரைக்கின்றனை" என்பதாம்.

வந்தாய்பவர் தோழியாகவும், முசுக்குருளை தலைவனாகவும், உருட்டுதல் வேண்டியவாறு ஒழுகும் தலைவனது ஒழுக்கமாகவும் உரைப்பினும் பொருந்தும்.

மெய்ப்பாடு—*அசைவுபற்றிய அழுகை.*
பயன்—*ஆற்றாமை அறிவித்தல்.*

பாலை

*தலைமகன் பிரிவால் தலைவி ஆற்றாது வருந்துகின்றாள் எனக் கவன்றதோழிக்குத் தலைவி, தன் வருத்தம் தலைவனின் பிரிவாற்றாமையால் அன்று அவன் சென்ற சுரநெறியின் கொடுமையைக் குறித்ததாம் என்று கூறியது.*

ஔவையார் பாடியது

39. வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்றுவிளை யுழிஞ்சில் வற்ற லார்க்கும்
மலையிடை யருஞ்சுர மென்பநம்
முலையிடை முனிநர் சென்ற வாறே.

*என்பது பிரிவிடை யாற்றல் வேண்டுமென்ற தோழிக்கு யாங்ஙனம் ஆற்றுவேனெனத் தனது ஆற்றாமை மிகுதிதோன்றத் தலைமகள் கூறியது.*

பதவுரை :—

*நம்முலையிடை முனிநர் சென்ற ஆறு—நம்முலையிடத்துத் துயிலுதலை வெறுத்தகன்ற தலைவர் சென்றவழியை, மலையிடை—மலைகளினிடையில், வெம்திறல் கடுவளி—கொடிய வலிமையுடைய கடியகாற்று, பொங்கர்ப் போந்தென—மரக்கிளைகளின்மீது அடித்ததென்றலும், நெற்றுவிளை உழிஞ்சில் வற்றல்—முற்றியநெற்றுக்களை விளைவிக்கின்ற வாகைமரத்தின் உலர்ந்த காய்கள், ஆர்க்கும்—ஒலிக்கின்ற, அரும்சுரம் என்ப—கடத்தற்கரிய சுரநெறி என்று கூறுவர். (அதனால் யான் வருந்துகின்றேன் என்பது கருத்து.)*

*வளி—காற்று, பொங்கர்—மரக்கிளை. போந்தென—செய்தெனவென்னும் வாய்பாட்டு வினைஎச்சம். நெற்று—உலர்ந்தகாய். உழிஞ்சில்—வாகைமரம். முனிநர்—வெறுத்தவர்; முனிதல்—வெறுத்தல். ஆறு—வழி. ஆற்றின்கண் என்று ஏழனுருபு விரிக்க. 'ஆற்றை' என்று இரண்டன் உருபுவிரித்தலுமாம். நெற்றுவிளை யுழிஞ்சில்வற்ற லார்க்கும், என்பதோடு 'வாகைவெண்ணெற் றொலிக்கும்' (குறுந்—7) ஒப்புநோக்குக.*

மேற்கோள் விளக்கம் :—

*"வெந்திறற் கடுவளி............சென்றஆறே" பிரிந்துழி வழியருமைபிறர் கூறக்கேட்டுக் கூறுவன என்பதற்கு மேற்கோள்.*

(—தொல்—கற்பு—669 பக்)

*பொங்கர்—மரக்கிளை; "உயர்ந்தபொங்கருயர்மரமேறி"—*
(கலி—மருதம்-10)

*"பொரியரை யுழிஞ்சிலும் புன்முளிமூங்கிலும்"*
—(சிலப்—காடுகாண் காதை-76)

மெய்ப்பாடு—*அணங்குபற்றிய அச்சம்.*
பயன்—*ஆற்றாமைநீங்கல்.*

---

# தமிழ் யாப்பிலக்கண நூல்கள்

[வித்வான் மா. இராசமாணிக்கம் அவர்கள் P. O. L.]

*உலகின் மிகப்பழைய ஹீப்ரு, இலத்தீன், கிரீக், சம்ஸ்கிருதம் போன்ற மொழிகளைப்போன்றது 'தமிழ்மொழி' என்பது சரித்திரங்கண்ட உண்மை. எனவே, அத்தகைய பண்டை மொழிக்குகந்த இலக்கிய இலக்கண நூல்கள் எண்ணிறந்தன இருந்திருத்தல் இயல்பே. அவற்றுள் மிகச்சிலவே இப்போதுள்ளவை. மிகப்பல நூல்கள் அரைகுறையாகக் கி. பி. 12-ம் நூற்றாண்டுவரை இருந்தன என்பது யாப்பருங்கல விருத்தியுரை, காரிகையுரை, தொல்காப்பியச் செய்யுளியல் உரை, களவியல் உரை முதலிய உரைகளால் அறியக்கிடக்கிறது. பெயர்தானும் இன்றி அழிந்த நூல்கள் எண்ணில வாதல் வேண்டும் என்பதும் இனிது புலனாகும். இப்போதுள்ள தொல்காப்பியச் செய்யுளியல் உரையையும் யாப்பருங்கல விருத்தியுரையையும் பொறுமையோடு விடாது படிப்பவர் மனங்குளிரப் பல உயரிய இலக்கிய இலக்கண நூல்கள் இருந்தமை இனிதுணர்வர். சூத்திரங்களையும் உரையையும் ஆராயுமுன் அகத்தியர் காலம் தொல்காப்பியர் காலம் யாப்பருங்கலம் இயற்றிய அமிதசாகரர் காலம் இவை அறிதல் பெருந்துணை புரிவதாகும்.*

ஆசிரியர் அகத்தியனார் காலம் குறைந்தது கி. மு. 2387-ஆக இருத்தல் வேண்டும். *என்னை? கி. மு. 2387-ல் கடல்கோள் உண்டாகி, இலங்கையை இந்தியாவினின்றும் வேறு பிரித்தது.* [1] *அங்கனம் பிரித்த கடல்கோளே 'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோட்'டையும் இவற்*

1 Vide. Tennents 'History of Ceylon.'

றின் இடைப்பட்ட நாற்பத்தெட்டு நாடுகளையும் அழித்ததாகல் வேண்டும்.[1] அப்போது பாண்டியனது தலைநகராக இருந்தது மதுரை.[2] பாண்டியன் துணையைக்கொண்டு புலவரை ஒன்றுகூட்டிச் சங்கம் நிறுவித் தமிழ்நூல்களைத் தொகுத்தும், தாம் ஓர் இலக்கணம் செய்தும் வெளியிட்டமை நோக்கி அக்காலப்புலவர் அவரை நோக்கி, 'இவன் தமிழுக்கு அகத்தியன்' (இன்றியமையாதவன்) எனப் பாராட்டியதே, அப்பெரியார் 'அகத்தியர்' என வழங்கப்பெற்றதற்கு உகந்த காரணமாக இருக்கலாம். இக்கருத்தினைத் தமிழறிஞர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் கொண்டிருத்தல் எமது கருத்தை வலியுறுத்தல் காண்க. அகத்தியர் காலத்திருந்த பாண்டியன் 'நெடியோன்' பஃறுளியாறு கண்டவன்.

இரண்டாம் கடல்கோள் கி. மு. 504-ல் ஏற்பட்டது; அப்போது இலங்கையின் பெரும்பகுதி கடலுள் ஆழ்ந்தது என்பர் டென்னெண்ட். இராமாயண பாரதக் கதைகளிற் கண்ட நிகழ்ச்சிகளின் காலம் கி. மு. 1400—கி மு. 750 எனக் கொண்டனர் சரித்திரம் வல்லார். வால்மீகி இராமாயணம் முதலில் எழுதப்பெற்ற காலம் குறைந்தது கி. மு. 7-ம் நூற்றாண்டாக இருத்தல் வேண்டும் என்பது அறிஞர் கருத்து. அந்நூலில் பாண்டியன் தலைநகரம் 'கபாடபுரம்' எனக்கூறப்பட்டுள்ளது. முதற் கடல்கோளுக்குப் பின்னர்ப் பாண்டியன் இரண்டாம் சங்கம் கூட்டியது (அலைவாய் என்னும்) கபாடபுரத்தில் என்பது களவியல் கூற்று. அங்குத் தொல்காப்பியம் செய்யப்பட்டதென்றும் அது கூறுகிறது; அதுபோது கடல்கோள் உண்டாயிற்றென்றும் கூறுகிறது. இலங்கையின் பெரும் பகுதியை அழித்த கடல்கோளே குமரியாற்றுக்கு வடக்கே இருந்த சிறிதளவு நாட்டைக் (கபாடபுரம் உட்பட) அழித்ததென்பதில் வியப்பென்னை? எனவே, சரித்திரச் சான்றுகொண்டு காணின், **தொல்காப்பியரது குறைந்த காலம் கி மு. 504** எனக்கோடல் தவறாகாது. இதுவும் நிற்க.

**வீரசோழியம்**, முதற் குலோத்துங்கன் மகனை 'வீர **சோழன்**' பெயரால் பாடப்பெற்றது. முதற் குலோத்துங்கன் அரசாண்ட காலம் கி. பி. 1070—கி. பி. 1118. வீரசோழன் வெங்கிநாட்டுப் பிரதிநிதியாக இருந்த காலம் கி. பி. 1078—கி. பி. 1088-9 எனச் சாஸனம் கூறுகிறது. முதற் குலோத்துங்கனுக்குப்பின் அவன் மகனை 'விக்கிரம சோழன்' கி. பி. 1118-ல் பட்டம் பெற்றான். எனவே, வீரசோழன் அரசப்

1. Vide. Silappathikaram, Adiyarkkunallar's commentary.
2. களவியல் உரை.

பிரதிநிதியாகவே இருந்துவந்தவனாதல் வேண்டும். இவன் அரசப் பிரதிநிதியாக இருந்த காலத்திற்றான் பெரும்பாலும் இவன் பெயரால் (கி. பி. 1088—1088-9) 'வீரசோழியம்' புத்தமித்திரனால் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். அதிகப் படியாகக் கொண்டாலும் அதன் காலம் கி. பி. 1078—கி. பி. 1120 கொள்ளலாம். இந்நூலுக்கு உரைசெய்த 'பெருந்தேவனார்' புத்தமித்திரனார் மாணவர். எனவே, அவர் காலமும் ஆசிரியர் காலமும் மேற்கூறப்பெற்ற வீரசோழன் காலமாதல் வேண்டும். எனவே, இம்மூவரின் அதிக கால எல்லை கி. பி. 1120 எனக்கோடல் தவறாகாது. பெருந்தேவனார் வீரசோழியத்துள் 'யாப்பருங்கல ஆசிரியர் அமிதசாகரர்' எனக்கூறியிருத்தலால், பெருந்தேவனார் காலத்துக்கு யாப்பருங்கலம் முற்பட்டது என்பது உணரக்கிடத்தல் காண்க. எனவே, யாப்பருங்கலத்தின் காலம் கி. பி. 11-ம் நூற்றாண்டின் முற்பகுதிக்கு முற்பட்டது எனக் கொள்ளலாம்.

யாப்பருங்கல விருத்தியுரை யாசிரியர் விருத்தியுள் எட்டாரைச் சக்கரத்துக்கு மேற்கோளாகக் காட்டிய செய்யுளில் பல்லவ மல்லனைப்பற்றிக் கூறியுள்ளார். பல்லவ மல்லன் காலம் கி. பி. 8-ம் நூற்றாண்டின் முற்பகுதி. அவன் மூன்றாம் பல்லவ மல்லனாக இருப்பின் கி. பி. 9-ம் நூற்றாண்டின் முற்பகுதி. எனவே விருத்தியுரையாளர் கி. பி. 9, 10-ம் நூற்றாண்டுகளில் ஒன்றின் முற்பகுதிக்குப் பிற்பட்டவர் என்பது போதரும். விருத்தியாசிரியரும் காரிகையாசிரியரும் ஒருவரேயாதல் பற்றியும், யா. கலக்காரிகை பத்தாவது செய்யுள் உரையில் "வெண்பாவினோடும் ஆசிரியத்தினோடும் வந்த மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா யாப்பருங்கல விருத்தியுரையுள் 'காமர் கடும் புனல்' என்னும் பழம்பாட்டில் கண்டு கொள்க" என்று குணசாகரர் கூறியிருத்தல் பற்றியும் குணசாகரரே விருத்தியுரையாசிரியருமாயிருத்தல் கூடும் என்பர் புலவர் பலர். காரிகை விருத்தி இரண்டன் உரைகளையும் நோக்குங்கால் இவ்வுண்மை நன்கு புலனாகும். இது நிற்க.

'யாப்பருங்கலம்' என்பதில் உள்ள 'அருங்கலம்' என்பதனை ஆராய்வோம். சாஸன பரிசோதகரான திரு. கோபிநாத ராயர் 'செந்தமிழ்த்' தொகுதி 5-ம் பக்கம் வரி 97-ல் கூறியுள்ளது நோக்கத்தக்கது. "ஜைன ஆசாரியர் பல சங்கத்தாராகப் பிரிக்கப்பட்டிருந்தனர். ஒவ்வொரு சங்கமும் பல கணங்கள் கொண்டது. தென்தேயச் சங்கங்களிற் சிறந்தது 'திரமிள (தமிழ்ச்) சங்கம்.' இதிற் பிரசித்தியடைந்தது 'நந்திகணம்'. இக்கணத்திற் சிறப்புற்றிருந்தது 'அருங்கலான்

வயம்' (அன்வயம்-பரம்பரை.) அருங்கலான் வயம், 'தீபங்குடியின் நிடும்பறை தீர்த்தத்தின் அருங்கலான் வயம்' என்று ஒரு சாஸனத்தில் குறிக்கப்பட்டுள்ளது. ஆதலின், இப்பரம்பரையினர் முதன் முதல் தீபங்குடியினரா யிருந்திருத்தல் வேண்டும். இத்தீபங்குடி திருவாரூர்ப் பக்கத்து 4 மைல் தூரத்தில் உள்ளது. இவர் தமிழரே ஆயினும், தமிழ்-கன்னடம்-சம்ஸ்கிருதம் முதலிய பாஷைகளில் அதி நிபுணர்.''

இதனால், 'அருங்கலம்' என்பது ஜைனாசாரிய பரம்பரையில் ஒரு பிரிவு என்றும், அது தமிழ்ச்சங்கத்தின் பகுதி என்றும், தீபங்குடியில் இப்பிரிவினர் முதலில் இருந்தனர் என்றும் தெளியலாம். அமித சாகரர் அருங்கலான் வயத்தைச் சேர்ந்தவர் ஆதலின், தம் யாப்பு நூல்கட்கு யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கல விருத்தி எனப் பெயரிட்டனர். இவ் வருங்கலான் வயத்தார் சிறப்புற்றிருந்த காலம் கி. பி. 9,10-ஆம் நூற்றாண்டுகள் எனச் சாஸனத்தால் தெரிகிறது. எனவே இந்தக் காலத்தேதான் இவ்விரு நூல்கள் செய்யப்பட்டிருத்தல் வேண்டும். எனவே, இதுகாறுங் கூறியவற்றால், அகத்தியர் காலம் கி. மு. 2400 எனவும், தொல்காப்பியர் காலம் கி. மு. 500 எனவும், யாப்பருங்கலக் காரிகை, விருத்திகளின் காலம் கி. பி. 800-1000-க் குட்பட்ட காலம் எனவும் கொள்ளச் சரித்திர அறிவும் நூலறிவும் பகுத்தறிவும் இடந்தருதல் காண்க.

இனி, யாப்பருங்கல விருத்தியுரையுள் காணப்படும் நூல்கள் யாவை எனக் காண்போம்: அவை, செயல்முறை, செயிற்றியம், அகத்தியம்; மயேச்சுரர் யாப்பு; கையனார் இலக்கணநூல், தொல்காப்பியம், பல்காயம், காக்கை பாடினியம், நற்றத்தம், அவிநயம், வாய்ப்பியம்; சிறுகாக்கை பாடினியம், பரிமாணனார் இலக்கணநூல், செய்யுளியல், நல்லாறனார் இலக்கண நூல்; நக்கீரர் நாலடிநாற்பது; சங்கயாப்பு, மாபுராணம், பாட்டியல் நூல், யாப்பருங்கலம், காரிகை முதலியன. இனி இவற்றின் காலவரையறை காண்போம்.

(கி. மு.—கி. மு. 2387)

"கலியுறுப்புக்குஅளவை செயல்முறையுள்ளும்செயிற்றியத்துள்ளும் அகத்தியத்துள்ளும் கண்டுகொள்க. அவை ஈண்டு உரைப்பிற் பெருகும்'' (யா. வி. சூ. 82-ன் உரை) எனவும், "இஃதல்லாதன செயல்முறையோடும் செயிற்றியத்தோடும் அகத்தியத்தோடும் ஒக்கப்பாடின இல்லை என்ப'' (யா வி. சூ. 83-ன் )உரை எனவும், "மற்றையன இவ்வாறு செயிற்றியத்

நூள்ளும் அகத்தியத் நூள்ளும் ஓதிய இலக்கணம் தழுவிக் கிடந்தன இல்லை என்பது. இவ்வாறு சொன்னார் நீர்மலிந்த வார் சடையோன் பேர்மகிழ்ந்த பேராசிரியர்'' (யா. வி. சூ. 84-ன் உரை) எனவும் உரையாசிரியர் கூறுவதை ஊன்றிக் கவனித்தல் வேண்டும். அவர் மும்முறை கூறியுள்ள நூற்பெயர்களுள் அகத்தியத்தை ஈற்றில்வைத்திருத்தல் நோக்கத்தக்கது. எனவே, செயல்முறை, செயிற்றியம் என்னும் இலக்கணநூல்கள் அகத்தியத்துக்கு முற்பட்டவை என்பதோர் உண்மை உணரக்கிடத்தல் உணர்க.

(கி. மு. 2387—கி. மு. 500)

அகத்தியத்தை முதனூலாகக்கொண்டு யாப்புநூல்கள் பல செய்யப்பட்டன என்பது, 'அகத்தியனார் ஆணையினுல் செய்யப்பட்ட நூல்கள்யாவும்' வகையுளி சேர்த்துக என்பதனுல்' (யா. வி. சூ. 95-ன் உரை) என்னும் உரை நோக்கி உணர்க.

யாப்பருங்கல விருத்தியுரையுள் கூறப்படும் பேராசிரியர் சிவபிரானுக்குரிய பல பெயர்களால் கூறப்படுதலையும், ஏடுகளில் அப்பெயர்களோடு 'மயேச்சுரர்' எனும் பெயர் காணப்படுதலையும் நோக்கப் பல பெயர்களைக் கொண்ட பேராசிரியர் 'மயேச்சுரர் என்பவரே என்பது உறுதிப்படுகிறது. இம் மயேச்சுரரே மேற்காட்டியபடி செயல்முறை, செயிற்றியம், அகத்தியம் எனக் கூறியவர். மயேச்சுரர் செயல்முறை, செயிற்றியம், அகத்தியம் என்ற மூன்றையும் தழுவி நூல்செய்தவர் என்பது மேற்காட்டியுள்ள மூன்றிடங்களில் அவர் கூறியன கொண்டு உணரலாம். எனவே, இவர் தோல்காப்பியர்க்கு முற்பட்டவராகவோ சமகாலத்தவராகவோ இருத்தல் வேண்டும்.*

இப்போதுள்ள தொல்காப்பியம் பண்டையது என்பதும் அதன் காலம் கி. மு. 504 அல்லது சிறிது முற்பட்டதெனவும் மேற்கூறினேம். அதன் பாயிரம் பகர்ந்த பனம்பாரனார் 'வடவேங்கடம் தென்குமரி' எனத் தெற்கெல்லை குமரியாறுகக் கூறியுள்ளார். அதேபோன்று காக்கைபாடினியாரும் தமது யாப்பு நூலில்,

> ''வடக்கும் தெற்கும் குணக்கும் குடக்கும்
> வேங்கடம் குமரி தீம்புனற் பௌவமென்

---

* ''அஃது ...............சொன்னார் கையனார், தோல்காப்பியனார் முதலாகிய ஒருசார் ஆசிரியர்'' (யா. வி. சூ. 34-ன் உரை) என வருதலை நோக்க. தோல்காப்பியர்க்குமுன் கையனார் இலக்கணம் செய்தனராகல் வேண்டும், எனக்கொள்ளலாம்.

*நிங்கான் கெல்லே அகவயிற் கிடந்த*
*நூலதின் உண்மை வாலிதின் விரிப்பின்"*

எனக்கண்டிருத்தலால், காக்கை பாடினியார் குமரியாறு கடல் கோள்ளப்படாமுன் (கி. மு. 504-க்கு முன்) இருந்தவர் என்பர் பேராசிரியர் (தொ. செ. முதற்சூத்திர வுரை).

யாப்பருங்கல விருத்திமுதற் சூத்திர வுரையில்,

"தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்;
பல்காய ஞர்பகுத்துப் பண்ணினர்;—நல்யாப்புக்
கற்றூர் மதிக்கும் கலேக்காக்கைப் பாடினியார்
சொற்றூர்தம் நூலுள் தொகுத்து"

எனவரும் வெண்பாவில் காக்கை பாடினியார் இறுதியில் கூறப்பட்டுள்ளனர்; அவரே கடல் கோளுக்கு முற்பட்டவர் எனின், அவர்க்கு மேலாகக் கூறப்பட்டுள்ள 'பல்காயனர்' என்பாரும் குமரியாறு கடல் கோள்ளப்படாமுன் இருந்தவர் என்பதில் ஐயமென்னே? எனவே பல்காயனரும் தொல்காப்பியர் காலத்தவர் (கி. மு. 504-க்கு முற்பட்டவர்) என்பது உண்மை.

காக்கைபாடினியாரை ,'தொல்லாசிரியர் மாபெரும் புலவர்' என யாப்பருங்கல விருத்தியுரையாளர் பாராட்டியுள்ளார். "காக்கை பாடினியார் முதலிய தோல்லாசிரியர் மதம் பற்றி ஈண்டு நாலசைச்சீர் எடுத்தோதினர்" (யா. வி. சூ. 10-ன் உரை) எனவும், "......அவ்வாறு வரின், வெண்பா வழியும் செப்பலோசை தழுவி நில்லாதாகலின் என்று மறுத்தார் காக்கைபாடினியார் முதலிய மாபெரும்புலவர். அவரது துணிபே இந்நூலுள்ளும் துணிபென்று யாப்புறுத்தற்கு வேண்டப்பட்டதென்க" (யா. வி. சூ. 22-ன் உரை) எனவும் கூறுவனவற்றல், இவர்தம் புலமையும் பெருமையும் பழமையும் பாங்குற உணரலாம்.

தொல்காப்பியர் காலத்தில் பன்னிரு படலம் என்னும் புறப்பொருள் இலக்கண நூல் ஒன்று இருந்ததென்பது புறப்போருள் வெண்பாமாலேப் பாயிரத்தானும், யாப்பருங்கல விருத்தியுரையானும் உணரலாம். அதனேயும் உரையாளர், "........இவற்றின் விகற்பமெல்லாம் பன்னிரு படலத்துள் காண்க" (யா. வி. பக். 562) எனக் கூறியிருத்தலே நோக்க அந்நூல் கி. பி. 11-ம் நூற்றூண்டு வரை இருந்ததாகத் தெரிகிறது.

தொல்காப்பியம்—செய்யுளியல்; சூ. 105-ன் உரையில் பேராசிரியர், "........பாவென மொழியினும் தூக்கினது

பெயரே' என்றார் இந்நூலின் (தொல்காப்பியத்தின்) வழிநூல் செய்த ஆசிரியரும் என்பர். இச்சூத்திரம் செய்தார் நற்றத்தனார் (நத்தத்தனார்) என்பது யா. முதற்சூத்திர வுரையில் காணப்படுகிறது. இந் நற்றத்தனார் தொல்காப்பியரோடிருந்த பதினொருவருள் ஒருவர் எனக்கூறப்படுதலின், இவரும் தொல்காப்பியர் காலத்தவராகவே இருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது.

'அவிநயம் யாப்புக்கு நாலடி நாற்பதுபோல—யாப்பருங்கலம் என்னும் யாப்புக்கு அங்கமாய்' எனக்காரிகைத் தற்சிறப்புப் பாயிரத்தடியில் வருவதால், 'நாலடி நாற்பது' என்னும் யாப்புநூல் ஒன்று 'அவிநயம்' என்னும் யாப்பு நூலுக்கு அங்கமாய்ச் செய்யப்பட்டது என்பது இனிது புலனாகும். 'நாலடி நாற்பது' நக்கீரர் செய்ததென்பது யா. வி. உரையால் அறியலாம்.

(தொடரும்)

---

# தமிழிலக்கணத் தத்துவக்கிடை

[ஈப்போ. திரு. தியாகராஜன் அவர்கள், G. M. V. C.]

(முன் ௨௭௭-ம் பக்கத்தொடர்ச்சி)

## இடை

## TIME AND SPACE

"What we vaguely call being is nothing more than a series of things variously conditioned in time and space and distinguished from one another by different properties"

[Indian Philosophy by Professor Sir Radhakrishnan Vol. 2 Page 187.]

முற்கூறிய மேற்கோளில் Properties என்பதை விடுத்து மற்ற தன்மையைப் பின்வரும்,

"இடையெனப் படுபவ பெயரொடும் வினையொடு
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே"

[தொல். சொல். 249]

என்னும் சூத்திரத்தில் 'பெயரொடும்' என்பதற்கு "With the things" என்பதாகப் பொருள்கொண்டு ஆராய்ந்து பார்க்கின் இடை (Time and space) பொருளொடும், வினையொடும் தழுவிநிற்குமே யொழிய தானாய் நின்றியங்கின் பொருள் படாது. மேலும்,

"Space deals with co-existence, time with succession. Things move by virtue of time and hold together by virtue of space. While space and time cover the most comprehensive kind of relations, transition from place to place, or state to state, spatial locomotion and temporal alterations they are only formal and imply real things which move and change."

[Prof. Sir, Radhakrishnan, Indian Philosophy, Vol. 2, Page 192.]

இக்கூற்றை முற்கூறிய சூத்திரத்தோடும், தொல்காப்பியம்,250-ம் சூத்திரமாகிய

"அவைதாம்,
புணரியனிலை யிடைப் பொருணிலை குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப்பொருள் வயி னுருபாகுநவு
மசைநிலைக் கிளவி யாகி வருநவு
மிசைநிறைக் கிளவி யாகி வருநவுந்
தத்தங்குறிப்பிற் பொருள் செய்குநவு
மொப்பில்வழியாற் பொருள் செய்குநவுமென்
றப்பண்பினவே நுவலுங் காலை"

என்பதுடனும் ஒப்பமைப்பு நோக்கின் தத்துவக் கருத்துக்களுக்கு இச்சூத்திரங்கள் ஒப்பியிருக்கிறதாகத் தோன்றுகிறது. இன்னும்:—

"Space is an empty concept when not filled with perceived objects; 'Space' merely means that certain objects are for the perceiving mind, at such and such a position, or distance, with reference to other perceived objects, and no external perception is possible except of objects in space."

(The Story of Philosophy by Will Durant, Page 312)

1. Space is an empty concept etc. இடையெனப் படுபவ தமக் (கியலும்) இயல்பிலவே.

2. That certain objects are for the perceiving mind at such and such a position or distance. 'புணரியனிலையிடைப் பொருணிலை குதநவும்' என்னு மொற்றுமைகளும் மற்றவையும் பெரும்பான்மையாயுளவே.

உரி

(Attributes or Characteristics)

"பலவகைப் பண்பும் பகர் பெயராகி
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட்குரியன வுரிச்சொல்"

[பவண. உரி. 441]

The words denoting attributes or characteristics are உரிச்சொல்.

Just as there are Special or particular characteristics and General or common characteristics there are- ஒரு குணத்திற்கே உரியவாயும் பலகுணத்திற்கே உரியவாயும், பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையுந் தழுவிய உரிச்சொற்கள்.

மற்றும் இவ்வுரிச்சொற்கள் தத்துவநோக்கங்களை யுடைத்தாயிருப்பதை பவணந்தியார் நன்னூலில் உரிச்சொல்லியலில் காண்க.

After all, the world is constantly changing in time and so,

"பழயன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல காலவகையினனே"

[பவண. நன்னூல். 461]

அறிவினும், ஆற்றலினும் குன்றிய யான் எனக்கெட்டியவரையில் இவ்வொற்றுமைகளை யெடுத்துரைத்தேன். தமிழ் வல்லறிஞர் இத்தன்மையை நன்கு உற்று, ஓர்ந்து உணர்ந்து எடுத்துரைப்பாராயின் தமிழ் உலகத்திற்கும் பெருந்தொண்டியற்றியவராவார்.

Subject or எழுவாய்—The source of action.

Predicate—பயனிலை—The condition of state of the end in view i. e. the effect used for the cause in action. Thus the action is emphasised though not mentioned.

செயப்படுபொருள்—That which is being done

# ஆனைந்து

[திரு. துடிசைகிழார் அ சிதம்பரனார் அவர்கள்]

(முன் உ௯௫-ஆம் பக்கத்தொடர்ச்சி)

தேவர்களால் வசிக்கப்பட்டதாகிய பஞ்ச கௌவியமானது மூன்று லோகங்களிலும் பரிசுத்தமானது.

| | |
|---|---|
| கோமூத்ரத்தில் | வருணனும் |
| கோமயத்தில் | அக்கினியும் |
| தயிரில் | வாயுவும் |
| பாலில் | சந்திரனும் |
| நெய்யில் | சூரியனும் |

வசிக்கிறார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த முறையைத்தான் ஆரியப் பஞ்சாங்கப் பிராமணர்கள் கையாளுகிறார்கள்.

ஆரியர்கள் வருமுன் தமிழ்நாட்டில் இந்த முறை கிடையாது. தமிழ்நாட்டில் ஆரியப் புரோகிதர்கள் வந்துசேர்ந்த பிற்பாடு தமிழர்கள் அவர்களை, வேடத்தைப்பார்த்துச் சைவர்களென நம்பி, தங்கள் இல்லங்களில் கிரியையாதிகள் செய்ய அழைத்தபோது மேற்கண்ட முறையை மெல்ல மெல்ல நுழைத்துவிட்டார்கள்.

பராசரர் என்பார் வியாசருடைய தகப்பனார்; **1580 B. C.**-யில் வாழ்ந்தவர்.

இவருக்குமுன் மனு ஸ்மிருதியை எழுதிய மனு என்பார் **2200 B. C**-யில் இருந்தவர். 18 ஸ்மிருதிகளில் முதல் ஸ்மிருதி மனுவாகும்.

பராசரருடைய பிள்ளையாகிய வேதவியாசரும் ஒரு ஸ்மிருதியை எழுதியிருக்கிறார்.

2150 B. C, யில் இயமன் என்பார் ஒரு ஸ்மிருதி எழுதியுள்ளார்.

பராசரர் கூறும் பிரகஸ்பதியானவர் 2070 B. C.-யில் இருந்தவர்.

ஸ்மிருதிகளில் கூறிய பஞ்சகௌவியமானது வியாதியைப் போக்குகிறதற்கும், பாபங்களைப் போக்குகிறதற்கும், தீட்டைப்

போக்குகிறதற்கும் சொல்லியிருக்கிறதே யொழிய சிவபெருமானுடைய முழுக்குக்கு உகந்ததாகக் கூறவில்லை. இதனை ஒவ்வொருவரும் கவனித்தல்வேண்டும்.

ஆகையால், ஸ்மிருதிமுறை தமிழர்களுக்கு உரித்தானதல்ல.

ஆரியர்களுக்குள் ஆபஸ்தம்பம், போதாயனம், ஆஸ்வலாயனம், வைகானசம், என்ற சூத்திரங்களின்படி நடவடிக்கைகள் உண்டு.

| | |
|---|---|
| ஸ்மார்த்தப் பிராமணர் | ஆபஸ்தம்பம் |
| அவர்களில் சிலர் | போதாயனம் |
| மாத்வப் பிராமணர் | ஆஸ்வலாயனம் |
| வைணவர்கள் | வைகானசம், பாஞ்சராத்திரம் |

இந்த சூத்திரங்களைப் பின்பற்றினவர்கள் பஞ்சகௌவியம் கூட்டும் முறையும் வழங்கும் முறையும் ஒவ்வொரு சூத்திரக்காரருடைய அபிப்பிராயப்படி சிற்சில மாறுதல்களை உடைத்தாயிருக்கின்றன.

தமிழர்கள் எல்லாம் நந்தியெம்பெருமான் அருளிய சூத்திரப்படி நடவடிக்கை நடத்துபவர்கள்.

ஆகையால் ஆரியர் முறைவேறு, தமிழர் முறைவேறு என்பதனை அறிவாராக. தமிழர்கள் தங்களுக்கு அனாதியே ஏற்பட்டிருக்கும் "நந்தி சூத்திர"த்தை மறந்துவிட்டு இப்போது தங்களை போதாயன சூத்திரக்காரர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். அது அறியாமையினாலேயேதான். எப்படித் தமிழர்கள் தங்களை இன்னார் என்று அறியாமல் ஆரிய நான்கு சாதிப் பகுப்புக்களில் ஒன்றாகிய சூத்திரசாதியில் நுழைத்துக் கொள்ளுகிறார்களோ அதுபோலவே என்க. இம்மயக்கங்களெல்லாம் அறவே ஒழியவேண்டும், அப்போதுதான் உண்மை தெரியும்.

## 3. தமிழ்-ஆரியர் பத்ததிகளின்படி ஆனைந்து

தமிழ்நாட்டு ஆதிசைவர்களில் சிறுபான்மையோர் பிராமண மதத்தைத் தழுவிக்கொண்டு ஸ்மிருதியை அநுசரித்துக் கிரியைகள் ஆரம்பித்தபொழுது, ஆரியாசாரம், தமிழாசாரம் இரண்டையும் சேர்த்து விதிகள் எழுத நேர்ந்தது. ஏனென்றால், உடனே தமிழ் ஆசாரங்களை அவர்கள் விடுவதற்கில்லை. பழக்கம் கொடிது. என்செய்வர்!

ஆகையால் பத்ததிகள் எழுதப்பட்டன. பத்ததிகள் 18 ஆகும். ஸ்மிருதிகளில் எப்படி மனு ஸ்மிருதியும் பராஸர ஸ்மிருதியும் அதிகமாய் வழக்கத்திலிருக்கின்றனவோ, அப்படியே பத்ததிகளிலும் அகோர சிவாசாரியார் பத்ததி சோமசம்பு சிவாசாரியார் பத்ததி, இவ்விரண்டும் அதிகமாய் வழங்கப்பட்டு வருகின்றன. தமிழ்நாட்டில் அதிகமாய் அகோர சிவாசாரியார் பத்ததியே வழங்கப்படுகின்றது.

அகோர சிவாசாரியார் பத்ததியில் கீழ்க்கண்டவாறு சொல்லப்பட்டிருக்கிறது :—

"கவ்வியம் என்பதின்கருத்து பசுவிலிருந்து பெறப்படுவது என்பது பொருள். அவை பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பவைகளாம்.

"பசுவானது புண்ணிய வடிவத்தை உடையதாதலால் அதிலிருந்து தோன்றுவன மந்திரத்தைப் பதித்தற்குத் தகுதியுடையன. மந்திரத்தைப் பதித்தபின் பஞ்ச கௌவியத்தைப் பருகுவதினால் மனம் சுத்தமடையும். பொருள்களிலே தெளித்தால் அவற்றிலே மந்திரம் பதிந்து அவைகளும் சுத்தமாகும்.

"கவ்வியத்தில் பஞ்சபிர்ம மந்திரங்களும் தண்ணீரில் சிவமூலமந்திரமும் பதிக்கப்படும். பின்பு எல்லாம் சேர்க்கப்படும்"

## சிருஷ்டிக் கிரமம்

தெ

| | | | | |
|---|---|---|---|---|
| | பிரகிருதி தத்வம் அவ்யக்த பாத்ரம் மூலமந்திரம்-6 தண்ணீர் | சாதாக்கிய தத்வம் சுசாந்த பாத்ரம் தத்புருஷம்-2 தயிர் | | |
| மேற் | புருடதத்வம் ரத்னோதக பாத்ரம் வாமதேவம்-4 கோசலம் | சிவதத்வம் சுப்பிரதிஷ்ட பாத்ரம்ஈசானம்-1 பால் | வித்யாதத்வம் தேஜோவத் பாத்ரம் அகோரம்-3 நெய் | கிழ |
| | | காலதத்வம் அமிர்தாத்மக பாத்ரம் சத்தியோசாதம்-5 கோமயம் | | |

வட

## திதிக் கிரமம்

வடக்கு

| நீர் 6 | தயிர் 2 | |
|---|---|---|
| கோமயம் 4 | நெய் 1 | கோமூத்திரம் 3 |
| | பால் 5 | |

மேற்கு — கிழக்கு

தெற்கு

## சம்ஹாரக் கிரமம்

வடக்கு

| நீர் 6 | கோமயம் 2 | |
|---|---|---|
| பால் 4 | கோமூத்ரம் 1 | நெய் 3 |
| | தயிர் 5 | |

மேற்கு — கிழக்கு

தெற்கு

பஞ்சகௌவியம் கூட்டும் முறை மூன்று விதமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அவை:—

1. சிருஷ்டிக் கிரமம்
2. திதிக் கிரமம்
3. சம்ஹாரக் கிரமம்

ஆனால் பெரும்பாலும் சிருஷ்டிக் கிரமமே வழக்கத்தில் இருக்கிறது.

மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் (நிருதி திக்கில்) அரிசி அல்லது நெல்லைப் பரப்பி, அதில் மேலே காட்டியபடி ஒன்பது கோட்டங்கள் வகுத்து, மேலே சிருஷ்டிக்கிரமவடிவத்தில் உள்ளபடி 6 பாத்ரங்கள் வைத்து, கோட்டத்துக்கும் பாத்திரத்துக்கும் பூசைசெய்து, அந்தந்தப் பொருள்களை அந்தந்தப் பாத்திரத்தில் விட்டு, அததற்குரிய மந்திரத்தைக் கோட்டத்தில் குறித்துள்ளபடி அவ்வளவுதரம் செபிக்கவேண்டும்.

செபிக்கும்போது மூடுதல் (அப்யுக்சகணம்) என்னும் முத்திரையுடன் செபிக்கவேண்டும்.

பால், தயிர், நெய், கோசலம், கோமயம், என்ற முறைப்படி பூசிக்க. பின்பு கோமயத்தைக் கோசலத்திலும், பிறகு அவ்விரண்டையும் நெய்யிலும், பிறகு அம்மூன்றையும் தயிரிலும், பிறகு அந்நான்கையும் பாலிலும் சேர்த்துப் பிறகு தர்ப்பை ஜலத்தோடு சேர்க்கவேண்டும்.

சம்ஹிதா மந்திரங்களைச்சொல்லி செபித்து, இரட்சை-அவகுண்டனம்செய்து தேனுமுத்திரை கொடுக்கவேண்டும்.

பிராயச்சித்தத்துக்காயின் மூலமந்திரம் 108 உரு செபிக்கவேண்டும்.

அளவு

| | |
|---|---|
| பால் | 5 பலம் |
| தயிர் | 3 பலம் |
| நெய் | 2 பலம் |
| கோசலம் | 1 பலம் |
| கோமயம் | கைப்பெருவிரற் பாதி |

பால் அளவுக்குத்தக்க பிரகாரம் மற்றப்பொருள்களைக் கூட்டியும் குறைத்தும் கொள்ளலாம். ஆனால் வீதாசாரம் சரியாயிருக்கவேண்டும்.

தற்காலம் சைவமடாதிபதிகளும் சைவ கிரியாகுருக்கள்மார்களும் இந்தப் பத்ததி முறையையே பின்பற்றுகிறார்கள்.

ஆனால் பழய குடும்பத்தைச்சேர்ந்த சைவர்கள் தொன்றுதொட்டுவரும் பழக்கத்தினால் இந்த முறையைக் கைக்கொள்ளாமல் பழய வழக்கத்தையே கொண்டிருக்கிறார்கள்.

இந்த பத்ததிமுறையானது தமிழ்நான்மறை வழக்கோடு முற்றும் மாறுபட்டது என அறிக.

## சிவதருமோத்தரம்

ஆரிய ஸ்மிருதிகளை அநுசரித்து எழுதிய நூலாகிய சிவதருமோத்தரத்தில் பரம தருமாதியியலில் சிவபூசைக்குவேண்டும் உபயோகங்களில் தலைமையாகிய பஞ்சகௌவியத்தின் முறைமை பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது :—

அறைந்தனம் அமலன் வாக்கை ஆனிடையாறும் சொல்வாம்
சிறந்தறி சிவபூசைக்குத் தேடரும் பொருள்கள் என்றே

*இறந்தவர் என்போடாமை யீண்டெழின் மார்பிற் பூண்டு*
*புறம்புனத்தாடி பொற்றாள் புரிந்து மாதவபோதத்தில்*

(இ-ள்) வாராய் மிகுந்த தபசினையுடையோனே சிவனது திருவாக்கின் மகிமையைச் சொன்னோம். இனிமேல் பசுவின் கண் உளவாகிய கௌவியங்கள் ஆறினையும் சொல்லாநின்றோம். இவற்றைச் சங்காரகாலத்தில் இறந்துபோன அரி-அயன் முதலினோருடைய எலும்புடன் ஆமை ஓட்டையும் எழில்பெருகிய மார்பின்கண் அணிந்து, சுடலையின்கண் ஆடாநின்ற சிவனது பொற்பாதத்தை விரும்பிச்செய்யும் சிவார்ச்சனைக்குத்தேடும் அரிய பொருளென்று நின்னறிவின்கண் சிறப்பினோடும் அறியக்கடவை.

அந்தக் கௌவியம் உண்டாவதற்குக் காரணம் உணர்த்துகிறார்.

*அமரரும் அசுரர்தாமும் அமிர்துணக் கருதி வெற்பைத்*
*தமதுயர் பலத்தாற்றாங்கிக் கடைந்த பாற்கடலிற் றங்கிப்*
*பவமுறு மரியதேனுப் பஞ்சகம் பரமனாலே*
*அவன் முடிக்கருக மான வாறுமவ் வைந்தினாமே*

(இ-ள்) தேவர்களும் அசுரர்களும்அமிர்தமுண்ண விரும்பித் தங்களுடைய அதிபலத்தினாலே மகமேருவை மத்தாக எடுத்து, வாசுகி என்னுங் கயிற்றாற் கடையப்பட்ட திருப்பாற் கடலிலே நின்றும் சிவனருளினாலே நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை எனக்கூறிய ஐவகைப் பசுவும் தோன்றிப் பின்பு பூமியின்கண்ணே சிவபூசைக்கும் யாகாதி கன்மங்களுக்கும் ஆக உற்பவித்தன.

வந்த ஐந்து பசுவின்கண் சிவனது திருமுடிக்கு உரிமையான கோசலம், கோமயம், பால், தயிர், நெய், கோரோசனை ஆகிய கௌவியங்கள் ஆறும் உண்டாம்.

பஞ்சகம்—ஐந்தின் கூட்டம்.

கௌவியம்—பசுவின்கண் உண்டாயது.

*உத்தம ரோசனாந்தம் உரைத்திடும் ஆறும் ஓரின்*
*வித்தகம் பொருள்கள் வேண்டும் பலத்தினை விளைக்கும் என்றும்*
*அத்தனை அமலன்றன்னை ஆதரிப் பாருமார*
*இத்திறத் திசையத் தோன்றும் பொருள்களுமியம்புவாமே.*

(இ-ள்) பால்முதல் கோரோசனை ஈறாக உரைத்த ஆறும் ஆராயின் சுத்தமாகிய பொருள்களே. ஜெகத்பிதாவாகிய சிவனை அர்ச்சிக்கும் அவர்களுக்கும் புசிக்க அவரவர் விரும்பிய போகங்களை எக்காலமும் உண்டாக்கும். இப்படிக் கூறப்பட்ட

கெளவியங்கள் ஆறினும் பொருந்திநின்று தோன்றும் பொருள்களையும் மேற்சொல்லுவாம் :

கோரோசனையை—ரோசனை என்றது தலைக்குறை
கோசலத்துக்குத் திருவுண்டாகையாலும்
கோமயத்துக்கு வியாதி போகையாலும்
பாலுக்குச் சத்துரு நாசமாகையாலும்
தயிருக்குப் புத்திர ருண்டாகையாலும்
நெய்க்கு யாவராலும் அதிக பூச்சியதை உண்டாகையாலும்

கோரோசனைக்கு வயது அதிகமுண்டாகையாலும் வேண்டும் பலத்தினை விளைக்கும் என்று சிறப்பித்தார்.

கோமய மதனில் வில்வம் குறுமுனி கூடத்தோன்றும்
பூமக ளாந்தவில்வம் புரிந்ததிற் பொருந்து மாற்றால்
தாமமார் வில்வந்தானும் சீபல மென்றே சாற்றும்
நாமமும் புணரும் ஈசர் திருமுடிக்கணி எந்நாளும்.

(இ-ள்) கோமயத்தினின்றும் வில்வம் தளிருடன் தோன்றும். அந்த வில்வத்தைத் திருமகள் விரும்பி அதன்கண் இருக்கும் முறையாலே மாலையாகக் கட்டப்படாநின்ற இந்த வில்வம் சீபலம் என்னும் பெயரைப்பெறும். சிவனது திருமுடிக்கு எக்காலமும் அணிதற்கு உரியதாயும் விளங்கும்.

மற்றுமுள்ள புட்ப சாதிகளைப்போலக் காலகற்பனையின்றி எக்காலமும் சாத்துதற்கு உரித்தாகையால் 'எந்நாளும்' எனச் சிறப்பித்தார்.

உற்பல கமலமூலம் பின்பதி லுதிக்கு நீரில்
பொற்புறு குங்குலீயம் பொலிந்தெழும் புரியயாரும்
அற்புதன் றனக்கும் மற்றை அனைவர்க்கும் உணவதாகக்
கற்புறு செந்நெல் பாலில் கதிரொடு கலந்து தோன்றும்.

(இ-ள்) வில்வந் தோன்றியபின் நீலோற்பலக் கிழங்கும் தாமரைக்கிழங்கும் அந்தக் கோமயத்தின்கண் உண்டாம்.

கோசலத்தின் கண்ணின்றும் எழின்மிக்க குங்குலிய மானது எல்லாரும் விரும்ப விளங்கித் தோன்றும்; பாலிலே நின்றும் சிவனுக்கும், மற்றுமுள்ள தேவர், மானிடர் முதலிய யாவர்க்கும் உணவாகிய செஞ்சாலி முதலிய சாலி பேதங்கள் கதிரோடு பொருந்தி உற்பவிக்கும்.

சந்தன முதலாயுள்ள மங்கலம் ததியினுகும்
மந்தாரத் தமரருண்ணும் அமிர்தமும் நவநீதத்தாம்

சிந்தையார் சித்திபேதம் சிறக்கரோ சனையும்செய்யும்
அந்திவான் வண்ணன் மேனிக்கு அருகமிவ் வாறுமாமே.

(இ-ள்) தயிரினிடத்திலே சந்தனமுதலிய மங்கல பதார்த்தங்கள் தோன்றும். வெண்ணெயினின்றும் விண்ணிலுள்ள தேவர்கள் அருந்தும் அமிர்தம் உண்டாம். கோரோசனை யாவரும் விரும்பிய சித்திபேதங்களைத் தலைமைபெறத் தோற்றுவிக்கும். இங்ஙனம் கூறிய ஆறும் செக்கர் வானம்போன்ற நிறத்தையுடைய சிவனது திருமேனியில் ஆட்டிப் பணிதற்குரியனவாம்.

சந்தனம் முதலாய என்பதனால் அகில் குங்குமம் முதலியவெனக் கொள்க.

நவநீதம்—வெண்ணெய்

திடீரென்று இப்பாட்டில் வெண்ணெய் வந்ததற்கு காரணம் ஒன்று இருக்கவேண்டும்.

பால், தயிர், நெய், கோசலம், கோமயம், கோரோசனை இவ்வாறையும் பஞ்சகௌவியம் என்று முன்னே கூறிய நூலாசிரியர் இங்கே வெண்ணெயைக் கூறுவானேன். வெண்ணெயையும் சேர்த்தால் பொருள்கள் ஏழு அல்லவோ ஆகும்? ஆகையால் இவர் கூறியதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. இந்நூலைச் செய்த மறைஞான சம்பந்த நாயனர் தமிழர் முறையை அறிந்தவர். பால், தயிர், நெய் மோர், வெண்ணெய் தான் பஞ்சகௌவியம் என்று அறிந்தவர். ஆகையால் அவரும் அறியாமல் இப்பாடலைப் பாடிவிட்டார். என்ன முயன்றாலும் உண்மையை மறைக்க இயலாது.

ஆதலால் நெய்யாற் பாலால் ஆமில மற்றுமற்றும்
கோதறு ததியினாலும் குழகனன் முடிமேலாட்டிச்
சீதம தகன்ற நீரால் திளைப்புற வாட்டிச்சேர்ந்த
ஆதர வதனாலாட்டி ஆமல காதியாவும்

(இ-ள்) வெளி. இதனுள் ஆமிலம் என்பது புளிப்பு. மற்றுங் கோதறுததி-என்றது பால் காயாது நூலிழைவது, சீண்டு நாறுவது, முதலிய குற்றங்கள் இல்லாத தயிர்.

சீத மகன்றநீர்—இளஞ்சூடான வெந்நீர்.

ஆமலகாதி என்றதனால் நெல்லிக்காப்பு, மாக்காப்பு, மஞ்சட்காப்பு எனவறிக.

யாவும் என்பதனால் இளநீர், பஞ்சாமிர்தம் முதலாயின என்க. (தொடரும்)




திருவாவடுதுறையாதீனச் சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த
ஸ்ரீ ஹரதத்த சிவாசாரியர் சுலோகபஞ்சக
மொழிபெயர்ப்பிற்குத்

## திருமயிலை சண்முகம் பிள்ளை யவர்கள் செய்த உரை.

உயிர் காயத்திரிக்கு உரியபொரு ளாகலின்—பெருமை பொருந்திய காயத்திரிமாமந்திரத்துக்கு அதனுக்குரிய சிறப்புப்பொருளேயா மாகலானும்,

தயரதன் மதலை தாபித்து ஏத்தலின்—தயரத மாராசன் கான்முளையாய சீராமன் தனைத்தொடர்ந்த இராவணனாலாய பிரமச்சாயை தொலைதற்பாலதாய்ச் சேதுவின்மாட்டு ஓர் சிவக்குறி தாபித்து வணங்கலானும், (இதனைச் சேதுமான் மியத்தானுந் திருவானைக்காமான்மியத்தானுங் காண்க.)

கண்ணன் கயிலையில் நண்ணி நின்று இரப்ப—கிருட்டினன் வடகயிலாயப் பெரும் பொருப்பின்பா லடைந்து ஏற்ப,

புகழ்ச்சியின் அமைந்த மகப்பேறு உதவலின்—அங்ஙனம் ஏற்புழிச் சாம்பனென்னும் பெயரிய சொல்வளன் பொருந்தும் பல்வகைச்சிறப்பி னல்வழிப்புத்திரப்பேறு நல்கலானும்; (இதனைப் பாகவதபுராணத்தாற் காண்க.)

தனது விழியுடன் ஓர் ஆயிரம் புது கமலமலர்கொண்டு—தனது விழியாய சிவந்த பங்கயமலரோ டொழிந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பானென்னு மெண்ணிஞய அன்றலர்ந்த தாமரைமலரைக் கைக்கொடுவந்து,

அரி பூசனை ஆற்றலின்—திருமால் சிவாகமத்துட் கிரியா காண்டத்திற் கூறிய விதிவழி தவறாது விதிமார்க்க பூசனையை யியற்றுவான் புக்கபோது,

அவற்கு இரங்கி ஆழி ஈந்து அருடலின்—அன்று சலந்தரற்பிளந்த திருவாழியினைக் கருணைகூர்ந்து அன்னோற்கு

உதவலானும்; (இதனைப் 'பங்கயமாயிரம் பூவினி' லென்னுந் திருவாசகத்தானு முணர்க.)

ஐங்கணைக்கிழவனை அழல் விருந்து ஆக்கலின்—ஐந்தென்னு மெண்ணினைய மலர்ப்பகழிக்குரியோனாய மதனைத் தனது நெற்றிமேலதாம் ஒற்றைநாட்டத்து அனற்கு விருந்து நுகரச் செய்தலானும்; ('கரத்தாமே—வெற்பன் மடப் பாவை கொங்கைமேற் குங்குமத்தின், கற்பழியும் வண்ணங் கசிவிப்பான்—பொற்புடைய, வாமன் மகனாய் மலர்க்கணை யொன் றொட்டியவக், காம னழகழித்த கண்போற்றி' யென்பதூஉம் இக்கருத்தே பற்றியென்க.)

அமைப்ப அரும் கடு விடம் அமுது செய்திடுதலின்—அன்று வேலையிற்றோன்றி அமைத்தற்கரிய கூரிய ஆலகால விடத்தினை அமரரைக் காத்தற்பொருட்டுப் போனகமாக் கோடலானும்; (இதனைக் 'கோலாலமாகி' யென்னுந் திருவாசகத்தாற் காண்க.)

தென்றிசைத் தலைவனைச் செகுத்து உயிர்பருகலின்—அவாசிக்கண்ணதாய்த் தென்புலத்தார்க் கரசுபுரியும் இயமனை மிருகண்டு முனிவனார் மகனார் மார்க்கண்டேயனார் பொருட்டுக் காலானுதைத்து அவனுயிர் கோடலாலும்; (இதனைக் கந்த மான்மியத்தானும், 'மறையவனொருமாணி வந்தடைய' வென்னுந் திருப்பாட்டானுங் காண்க.)

அவுணர் முப்புரம் அழிய வில் வாங்கலின்—நிருதர்புர மூன்றும் நீறெழச்செய்வான் வளையாமாமேரு வரையைச் சாப மா வளைத்துக்கோடலானும்; ('மேருவிலா' யென்றார் பிறரும்)

தக்கன் வேள்வி தகர்த்து அருள்செய்தலின்—சிறுவிதி மகத்தைச் சிதைத்து அவன் புன்றலைக்கு ஆட்டின்தலையே தலையாப் பொருத்தலானும்; ("திக்கமர்தேவர் திருந்தாச் செய்கைத் தக்கன்வேள்வி தளரச்சாடினை" யென்றார் பிறரும்.)

தனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்—பற்குநன் தவநிலையைக் காண்பான் கிராதவுருக்கொண்டு அமலன் அமராடி அவனுக்குத் தனது பாசுபதப்படையே பரிசா நல்கலானும்; (இதனை மாபாரதத்துங் காண்க.)

மானுடமடங்கலை வலிதபக் கோறலின்—இரணியனென்பானைச் செற்றற்பொருட்டு நரமடங்கலா வந்து உகிரான் அவனுடலம் பிளந்து உடலினின் றுயிர்நீக்கி அவன் சோரியைக்கவர்ந் தமையான் கள்ளுண்டு களித்தானைப்போலுங் களித்து உல

குயிரை வருத்த அவனைச் சிம்புள்வடிவாச் சென்று நிக்கிரகம் புரிதலானும்; ('கேசரியை வல்லுகிராற் கீண்டவரா' ரென்பதூஉம்அது.)

மாயோன் மகடூஉ ஆகிய காலை—திருமால் பெண்ணுருப் புணர்ந்தாங்கு சென்றகாலை,

தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்—அங்ஙனம் வந்தானின் பருத்த தனத்தை யணைந்து மாசாத்தாவென்னுங் குருந்தை நல்கலானும்; (இதனைக் கந்தமான்மியத்துங் காண்க.)

ஆழ்கடல் வரைப்பின் ஆன்றோர் அநேகர்—ஆழ்ந்த கடலினாற்சூழப்பட்ட இந்நிலவுலகத்தின்கண்ணதாய்ப் பதிபசுபாசமென்னுந் திரிபதார்த்தமே யதார்த்தமெனக் கொண்டொழுகும் பல்லோரும்,

அன்பு மீதூர அருச்சனை ஆற்றலின்—அற்புப்பெருக்கான் சிவார்ச்சனையை இகபரத்திச்சையற் றியற்றலான்,

நான்கு இருசெல்வமும் அவர்க்கு அருடலின்—சித்தியெட்டனையுந் தெரிந்து அங்ஙன மியற்றினருக்கு அருடலானும்;

ஐ இரு பிறப்பினும் அரி அருச்சித்தலின்—திருமாலாவான் தனது ஈரைந்தவதாரத்தினுஞ் சிவபூஜை செய்தமையானும்; (இதனைக் காஞ்சிமான்மியத்தானு முணர்க.)

இருவரும் அன்னமும் ஏனமும் ஆகி அடிமுடி தேட அழற்பிழம்பு ஆகலின்—அரி பிரம ரிருவரும் தாமே பிரமமென்று உளந்தடுமாறும் பசுஞான மேற்கொள்ளும் மாயாவாதிகளைப்போன்று உளமயக்குற்று அலமந்திருந்து அமராடிய வேலை அவர்நாப்பண் ஓரழற்பிழம்பாய் நிற்ப அவர் ஏனமும் எகினமுமாகிக் கீண்டும் பறந்துந் தேடகில்லாது வருந்த அவர்க்குண்மையை விளக்கி யருள்புரிதலானும்; (இதனைப் 'பிரமனரியு' மென்னுந் திருவாசகத்தானுங் காண்க.)

பிறப்பு இறப்பு ஆதி உயிர்க்குணம் இன்மையின்—பிறப் பிறப்பினோனுழலும் இவ்வுடம்பினோடு உயிர் கூடியிருப்புழி அறிவுமுதலாய முப்பானிரண்டு மிவைபோல்வன பிறவுமாய வுயிர்க்குணங்களுடைமையாந்தன்மை யின்மையனாகலானும்;

கங்கை சூழ்கிடந்த காசிமால் வரைப்பில்—கங்கையாற் றாற் சூழப்பெற்ற காசிகேந்திரத்தினிடத்து,

பொய்புகல் வியாதன் கை தம்பித்தலின்—அநாதி மலமுத்த சித்துருவாய பதிப்பொருளைப் பொருளென்னாது பசுத்துவமுடைய ஒன்றனைப் பொருளென்னும் பராசரன் மதலையின் கரமும் நாவுந் திருநந்திதேவராணையா னெழாமற் செய்தமையானும்; (இதனைக் காசி கண்டத்தானுமுணர்க.)

முப்புரம் இறுப்புழி—செம்பொன் வெண்பொன் கரும் பொன்னென்னும் இம் முத்திறத்துப் பொன்னினாய மூக் கோட்டைகளையும் அவற்றின் தலைவராய தாருகாக்ஷன் கமலா க்ஷன் வித்துன்மாலி யென்பாரையும் பொருது செயிப்பான் வந்தகாலை,

முகுந்தப்புத்தேள் மால்விடையாகி ஞாலமொடு தாங் கலின்—முகுந்தனென்னும் பெயரையுடையனாய திருமால் பெருமைதங்கிய விடபமாக வைதிகத்தேரினை அதன் பீட மாய பிருதிவியோடு தாங்கலானும்; ('கடகரியும் பரிமாவு' மென்பதூஉம் இக்கருத்தேபற்றி யென்க.)

அயன் சிரமாலை அளப்பு இல அணிதலின்—அரிப்பிர மாதியர் சிரமாலைக ளளவிறந்தன அணிதலாந் தன்மையானும்; ('நங்காயிதென்னதவ' மென்றார் ஆசாரியரும்.)

ஞானமும் வீடும் பேணினர்க்கு உதவலின்—ஆகமஞான மும் திருவடி ஞானமுமாய இருதிறத்து ஞானங்களும் சீவன் முத்தி பரமுத்தியென்னும் இருதிறத்து முத்திகளும் தன்னை அன்போடு உள்ளுஉன்றியடைந்தார்க்கு அருளுவதாந் தன் மையானும்;

பசுபதிப்பெயரிய தனி முதல் கடவுள்—பசுபதியென் னும் பெயரினையுடையனாயுந் தனக்கோ ரொப்புமையு மோர் முதலு மின்மையனாயும் யாவருள்ளுங் கலந்துங் கடந்தும் நின்ற இறைவன்;

உம்பர்கள் எவர்க்கும் உயர்ந்தோன் என்பது—எவ் வகைப்பட்ட இலக்கணங்களையுடைய கடவுளருள்ளும் மிக மேலாயவனெனப்படுமியல்பினை; ('செத்துப்பிறக்கின்ற தெய் வங்கள் மணவாளன' என்பதூஉம் அது.)

இயல்பு உணர்ந்தோரே—எவ்வகைப்பட்ட கடவுளரிலக் கணங்களையுங் குருமுகத்தானாராய்ந்து உணரும் அறிவினை யுடையோரே;

தெளிக—சுருதிகுரு சுவானுபவத்தாற் றெளிந்துணர்க.

உயர் காயத்திரிக்குரிய பொருளாகலினென்புழி, சிறப்புப் பொருந்திய காயத்திரி மந்திரத்தில், பார்க்கசத்தப் பிரதிபாதகம், சங்கார கிருத்தியத்தின்மேற் கிருத்திய மின்றாகலானுஞ், சங்கரற்கு மேற்றெய்வ மின்றாகலானுஞ் சங்கரனென்றே கோடும். இதூஉமன்றிச் சங்காரகிருத்தியத்தில் எவ்வகைப்பட்ட கிருத்தியங்களும் ஒடுங்கலானும் மீண்டும் ஆண்டுநின்றே விரிதலானுமென்க. இதனைச் சிவஞானபோதத்து முதற்சூத்திரத்தானும், இதன் பொருளை விரித்துக் கூறிய சித்தியார், சிவப்பிரகாசமிவற்றின் சூத்திரங்களானும் தாயுமானார் பாடலில், 'தேன்முகம்பிலிற்'றென்னும் பதிகத்தானுமுணர்க. பர்க்கசத்தத்திற்குச் சோதியெனப் பொருள் கூறி அதன் பொருளாவான் வாசுதேவனெனப் பாஞ்சராத்திரிகள் கூறுவாருமுளராலோவெனின், அற்றன்று, அவன் கருவந்திபோலுந் திருமேனியனாகலானும் இவன் செவ்வந்திபோலும் திருமேனியனாகலானுஞ் செவ்வந்தியே ஒளியுடைமையானும் அவர் கூற்றுக்குப் பொருளின்மையை யுணர்க. செம்பவள வண்ணர், செந்தீவண்ணர், செவ்வானவண்ணரென்பதூஉம் அது. இது நிற்க, உபநிடதத்தும் மிருதிநூலினுஞ் சிவாகமத்தும் ஆதித்த மண்டலாந்தரதேவதை அட்டமூர்த்தியாய வுருத்திர மூர்த்தியென்றுரைக்கப் படுதலானும், தருக்கநூலினும் ஆதித்த மண்டலத்தில் வன்னியிருப்பதென்றோதுபவாகலானும், அஃது அதனுக்கு இன்றியமையா ஒளியாகலானு மென்பதூஉந் துணியப்படுதலானும் அவர் அங்ஙனங்கூறுதல் அத்துணைச் சிறப்பின்றென மறுக்க. இதனை 'உளற்கரும்பரிதி மண்டலத்துறையும் பொருட்குண' மெனச் சிவதத்துவ விவேக விருத்தியிற் கூறியவாற்றானு முணர்க.

உம்மைகள் தொக்கு நின்றன

ஆங்கென்பதிரண்டும் அசை. அமைப்ப அரும் எனற்பாலது அமைப்பருமெனச் செய்யுள் விகாரம்பெற்று நின்றது. நண்ணிநின்றென்பது—இருசொல்லொரு நீர்மைப் பட்டுவந்த செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம். கமலப்புது மலரென்பதனைப் புதுகமல மலரென நிலைமாற்றிப் பொருளுரைத்துக் கொள்க. பற்குனனென்னும் பெயர்—பார்த்தன் பால்குனமாதத்தின் சனனமாயினமையின் அப்பெயரிடப்பட்டது: இது சித்திரையா னென்பதுபோலும். சித்தி யெட்டாவன, அணிமா, இலகிமா, கரிமா, மகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவமாகிய விவை யெண்வகையெனக் கொள்க.

ஐங்கணையாவன பங்கயம், அசோகு, மா, மல்லிகை, நீலோற்பலமாகிய விவை ஐவகையெனக் கொள்க.

வியாதன்கை யென்பதனுன்—நாவென்றது வருவித்துரைக்கப்பட்டது. வீடு துறவு முத்தி மோக்கமென்பன ஒரு பொருட்பல்பெயர்க்கிளவி. இவை நீக்கமென்னும் பொருட்டு. இதனை 'வீடென்றுரைதரு சொற்குப் பொருளோ விடுதலை' யென்பதனுனுமுணர்க.

ஆகம ஞானமெனினும் அபர ஞானமெனினும் வாசக ஞானமெனினு மொக்கும்.

திருவடி ஞானமெனினும் அநுபவ ஞானமெனினும் பர ஞானமெனினுந் திருவருண் ஞானமெனினு மொக்கும். இவற்றினையே ஒரு சாரார் பரோக்ஷா பரோக்ஷ ஞானமென்ப.

ஞானமிருவகை யென்பதனை 'இயம்பிடு ஞானமோரிருவகைப்படும்—பயன்றரு மபரமும் பரமுமென்னவே-நயந்தகலைகளே யபரஞானமா-முயர்ந்திடுபரஞ் சொலினுணர் வென்றேதுவாருளரென' நுதலிப்போந்த சுவாயம்பு சூத்திரத்தானுமுணர்க. முத்தி இருவகையென்பதனைச் 'சீவன்முத்தியே திகழ் பரமுத்தியே யென்ன—மேவுமுத்தியோரி ரண்டினு' மெனத் திருவானைக்கா மான்மியத்திற் கூறியவற்றானுமுணர்க.

என்பதெனற்பாலது என்று சொல்லுதற்றொழிலையுணர்த்தும் பொருட்டு. எண்ணைச் சொல்லுதற் றொழில்தொக்கு நின்றது. இங்ஙனஞ் சொற்றொக்கு நிற்பது சொல்லெச்சமன்றெனக்கூறிய ஆசிரியர் தொல்காப்பியர், பரிமேலழகர் முதலிய வுரையாசிரியர் கருத்துணராது அவர்க்குக் குற்றமுங் கூறினர் ஆசிரியர் பவணந்தியார். ஆகலின், சொல்லெஞ்சியிருத்தலே சொல்லெச்சமென்க. இதனை விரிப்பிற் பெருகும். இஃதொருவாறு முடிந்தது.

---




## குக்லியல்மோ மார்கோனி
## (Guglielmo Marconi)

[திரு. N. குழந்தைவேலன் B.A. அவர்கள்]

உலகப்புதுமைகள் யாவற்றினும் மேலாக விளங்குவது ரேடியோ (Radio) என்னும் கம்பியில்லாத் தந்தியாகும். இக்கருவி நெடுந்தொலைவிலுள்ள இடங்களுக்கு இடையில் கம்பி ஒன்றும் இணைக்காமலே மின்சாரத்தின் உதவியால் செய்திகளை அனுப்புவதற்குப் பயன்படுகின்றது. ரேடியோவின் மூலம் பல்லாயிரக்கணக்கான (மைல்) கல்லுக்கு அப்பாலுள்ளவர்கள் பேசுவதையும் பாடுவதையும் கேட்கின்றோம். இஃது எங்ஙனம் இயலும்? இவ்வியத்தகு செயல் மின்சார அலையினாலேயே நடைபெறுகின்றது. மின்சார அலை என்பது யாது? இதனை மிகத்தொலைவிலுள்ள ஓர் இடத்திற்கு அனுப்பி ஆங்குள்ள கருவியை இயக்குவது யாங்ஙனம்? ஒரு நீர் நிலையில் ஒரு கல்லை வீசி எறிவோமாகில் அந்நீரில் அலை தோன்றி நெடுந்தொலை பரந்து சென்று மறைகின்றது. மின்சார அலைகளையும் ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்குத் தாங்கிச்செல்ல நீரைப்போன்று வேறு ஏதேனும் ஒரு பொருள் வேண்டும். இத்தகைய பொருள் வான் வெளியெங்கும் பரவியுள்ளதும் மிகவும் நுண்ணிய அணுத்திரள்களால் ஆகியதுமான (Ether) ஈதர் என்னும் ஒரு வளி ஆகும். இவ்வியத்தகு வளியில் மின் அலைகள் ஒரு விநாடிக்குச் சற்றேறக்குறைய 186,000 (மைல்), கல் தொலைவு விரைந்து செல்கின்றன. இவ் அலைகள் ஈதர் வளியின் உதவியால் வானில் தோன்றும் எல்லாப்பொருள்களையும் தங்குதடையின்றி ஊடுருவிச் செல்கின்றது.

செய்திகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஈதர் மூலமாய் அனுப்புதற்கு முதலில், ஒலியானது மின்சார ஆற்றலாக மாற்றப்படுகின்றது. இம்மின்சார ஆற்றல் ஈதர் அலைகளின் உதவியால் குறிப்பிட்ட இடங்களுக்கு அனுப்பப்பெறுகின்றது. ஆங்கு இம்மின்சார ஆற்றலை மீண்டும் பழைய ஒலியின்வடிவாக மாற்றிச் செய்திகளை யாவரும் அறிகின்றனர். இங்ஙனமே இசைவாணர் ஒருவர் பாடினால் (Electro-magnet) மின்காந்தத்தால் ஆகிய ஒரு கருவி அப்பாடலி

ளுள்ள பலதிறப்பட்ட ஓசைகளை மின் அலைகளாக மாற்றி வான் வெளியிற் செலுத்துகின்றது. இவ் அலைகளைத் தொலைவிலுள்ள (Receivers) மின்வாங்கிகள் ஏற்றுக்கொண்டு அவற்றை (Loudspeaker) ஒலிபெருக்கியின் மீது பாய்ச்சி அப்பாடலைத்தெளிவாய்க் கேட்கும்படி செய்கின்றன.

இவ் அரிய ரேடியோ என்னும் கருவி குக்லியல்மோ மார்கோனி என்னும் பேரறிஞரால் கண்டுபிடிக்கப்பட்டது. இவர் 1875-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 25-ஆம் நாள் இத்தாலி நாட்டிற் பிறந்தார். இவர் இளமையிலேயே ஆய்வுகள் நடத்துவதில் மிகுந்த ஊக்கங்கொண்டிருந்தார். இவர் தமது வீட்டிற்கு அருகிலுள்ள குன்றில் வளரும் கள்ளிப்பழங்களை விடுவதில்லையென்றும், அவற்றின் சாற்றைப்பிழிந்து தாம் எழுதுவதற்கு மை ஆக்கிக்கொள்வார் என்றும் கூறப்படுகின்றது. இவர் மாணவராக இருக்கும்பொழுதே (Edison) எடிசன் என்னும் மின்சார வல்லுநரின் ஆராய்ச்சிகளையும், அவற்றால் விளையும் பயன்களையும் கேள்வியுற்றுத் தாமும் மின்சார ஆராய்ச்சியில் ஈடுபட்டார்.

இவர் தமது 14-ம் ஆண்டிலேயே வான்வெளியெங்கும் கண்ணுக்கு எட்டாது மறைந்து கிடக்கும் ஈதர் என்னும் வளியைப்பற்றி ஆராய்ச்சி செய்தார். கதிரவனின் ஒளி ஈதர் அலைகளின் உதவிகொண்டு நம்மைச்சேர்கின்றதென்றும், ஒளி அலைகளைப்போன்று அதே விரைவுடன் மின்சார அலைகளையும் இவ்வளியின் மூலம் செலுத்தக்கூடுமென்றும் இவர் கண்டுணர்ந்தார். அன்றியும் இவ் அலைகளின் உதவியால் செய்திகளை ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்கு அனுப்பக்கூடுமென இவருக்குத் தோன்றிற்று. இவர் ஈதர் அலைகளைத் தமது விருப்பம்போல் இயக்குவதற்கும் அவற்றை நெடுந்தொலைவிலுள்ள மின்சாரக்கருவியில் தாக்கும்படி செய்வதற்கும் வழிதேடலானார். இவர் இதன் பொருட்டுப் பல திறப்பட்ட ஆய்வுகள் நடத்தியதன் பயனாக 1896-ஆம் ஆண்டில் கம்பியின் உதவியின்றியே தந்தி அடிக்கும் வியத்தகு கருவிகளைச் செய்து முடித்தார்.

ஆயினும் இம்முறைப்படி அனுப்பும் செய்திகள் மிகவும் அருகிலுள்ள இடங்களுக்கே எட்டக்கூடியனவாக இருந்தன. மார்க்கோனி தாம் கண்டுபிடித்த இப்புதிய முறையைப் பரப்புதற்பொருட்டு இங்கிலாந்துக்குச் சென்றார். முதன் முதலில் இலண்டன் (தபால்) அஞ்சல் நிலையத்திலிருந்து 300 அடி தொலைவிலுள்ள ஓரிடத்திற்குச் செய்திகள் அனுப்பப்

பட்டன. மார்க்கோனியின் அரும்பெரும் முயற்சியினால் இக்கலை சிறிது சிறிதாக வளர்ச்சியுற்று 1899-ஆம் ஆண்டில் 200 கல் தொலைவுவரை செய்திகள் அனுப்பப்பட்டன. மறு ஆண்டின் தொடக்கத்தில் உலகம் போற்றும்* மார்க்கோனி தந்திச்சாலை நிறுவப்பெற்றது. மார்க்கோனி அல்லும் பக லும் இடைவிடாது வருந்தியுழைத்து நெடுந்தொலைவிலுள்ள இடங்களுக்குச் செய்திகளை அனுப்பும் ஆற்றல் நிறைந்த கருவிகளைச் செய்து முடித்தார். இவர் கார்ன்வால் (Cornwall) என்னும் இடத்தினின்றும் அட்லாண்டிக் கடலுக்கு அப் பாலுள்ள நியூஃபௌண்ட்லாந்துக்கு (Newfoundland) எவ்வா றேனும் செய்திகளை அனுப்பவேண்டுமென முயற்சி செய் தார். ஒரு வேளை தமது எண்ணம் நிறைவேறாவிடில் நகைப் பிற்கிடமாகும் என அஞ்சி இவர் தமது கருத்தை எவரிட மும் வெளியிடாது மறைத்து வைத்துக்கொண்டார்.

இவர் கார்ன்வால் தந்தி நிலையத்தில் எல்லா ஏற்பாடு களும் செய்து முடித்தவுடன் தமது உதவியாளர்களான கேம்ப் (Kemp), பேஜெட் (Paget) என்பார் இவருடன் புறப்பட்டு நியூஃபௌண்ட்லாந்துக்குச் சென்றார். ஆங்கு கடற்கரையோரமாக இருந்த பழைய கட்டடமொன்றில் தமது கருவிகளை அமைத்துக்கொண்டார். அவ்வமயம் காற்று மிகுதியாக இருந்ததால் இவர்தம் ஆராய்ச்சி சிறிது பொழுது தடைப்பட்டது. ஆயினும் ஊக்கம் குன்றாது எல்லாவற்றையும் சீர்படுத்திவைத்தார். இங்கிலாந்தை விட்டுப் புறப்படுவதன் முன் கார்ன்வால் தந்திநிலையத்திலுள்ள தமது ஆட்களிடம் ஒரு நாளைக்குறிப்பிட்டு அன்று மாலை 3 மணி முதல் இடைவிடாது 3 சிறிய மின்சார அலைகளை அனுப்பிக் கொண்டிருக்கும்படி கட்டளையிட்டிருந்தார். 3 சிறு அலைகள் அல்லது புள்ளிகள் தந்திமுறைப்படி S. என்னும் ஆங்கில எழுத்தைக் குறிப்பன ஆகும். குறிப்பிட்ட நேரம் வந்த வுடன் மார்க்கோனி தமது செவியில் மின்சாரக்கருவியை வைத்துக்கொண்டு உற்றுக்கேட்டார். காற்றோ மிகவும் கடுமையாக வீசிக்கொண்டிருந்தது. இதனால் அன்று முழு வதும் இவருக்கு ஓர் ஓசையும் கேட்கவில்லை. மறுநாள் மாலை சிறிது ஓசைகேட்கத் துவங்கிற்று. உடனே மார்க்கோனி தமது உதவியாளரின் செவியில் அக்கருவியை வைத்துக் கேட்கும்படி செய்தார். எனினும், சிறிது பொழுதிற்குள் அவ்வொலி நின்றுபோயிற்று. அனைவரும் பொறுமையோடு காத்திருந்தனர். நெடுநேரத்திற்குப்பின் அவ் ஓசை மீண்டும் கேட்கத்தொடங்கிற்று. இவ்வண்ணம் தந்திச்செய்தி கம்பி

* Marconi's Wireless Telegraph Company.

யின் உதவியின்றி அட்லாண்டிக் கடலை முதன் முதலாகக் கடந்து சென்றது. உலகிற் பெரியதொரு புதுமையைக் கண்டுபிடித்தோமென்பதையுன்னி மார்க்கோனி அளவிலா மகிழ்வெய்தினர்.

மார்க்கோனி தமது அரிய ஆய்வுகளாற் கண்டறிந்த உண்மைகளைப் புதினத்தாள்களில் வெளியிட்டார். துவக்கத்தில் மக்கள் பலர் அவற்றை உண்மையன்றென மறுத்தனர். (Kelvin) கெல்வின் என்னும் ஆராய்ச்சியாளரும் அவர் போன்றவர்களும் இவர்தம் அறிவுரைகளைப்போற்றிப் புகழ்ந்தனர். இதன் பின்னரே மார்க்கோனியின் பெருமை மக்களுக்குத் தெரியலாயிற்று. 27 ஆண்டுகளும் நிரம்பப்பெறாத இளைஞராயிருக்கும் பொழுதே இவ் அரிய ஆய்வுகளை நடத்தியதற்கு அறிஞர் அனைவரும் இவரைப் பாராட்டினர். அறிவியல் வளர்ச்சியின் பொருட்டு ஆண்டுதோறும் ஸ்வீடன் (Sweden) நாட்டில் வழங்கப்படுவதும் நூறு ஆயிரம் ரூபாய்க்குமேல் மதிப்பிடக் கூடியதுமான நோபெல் பரிசு (Nobel Prize) இவருக்கு 1909-ஆம் ஆண்டில் கிடைத்தது. தற்காலத்தில் எவரும் பெறுதற்கு அரிய பெரும்பேறுகளில் இஃது ஒன்று ஆகும். கம்பியில்லாத் தந்தியின் அருமைபெருமைகளை இத்தாலி, பிரான்சு, இங்கிலாந்து ஆகிய நாடுகள் நன்குணர்ந்து பல்வேறு இடங்களிலும் புதிய முறையில் தந்திநிலையங்கள் அமைத்துக் கொண்டன.

மார்க்கோனி தமது ஆராய்ச்சியை இவ்வளவோடு நிறுத்தி விடவில்லை. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு மறைபொருளாய் அனுப்பும் செய்திகளைப் பகைவர் எவரேனும் அறிந்துகொள்ளாமற் தடுப்பதற்கு வகைதேடலானார். இவர் பல்லாண்டுகளாய் ஓயாது உழைத்து "ஒலிதிருத்தல்" (Tuning) ஒன்னும் முறையைக் கண்டுபிடித்தார். இம் முறையில் மின்சார அலைகளின் அளவும் விரைவும் ஏறக்குறைய 200 வகைகளாய் மாற்றி அனுப்பப்படுகின்றன. செய்திகளைப்பெற்றுக்கொள்ளும் மின்வாங்கிக் கருவிகள் (Receivers) இவற்றிற்கேற்ப அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆகலின் அனுப்பப்படும் மின் அலைகளின் அளவு, விரைவு இவற்றை முன்னால் அறிந்து அதற்கு ஏற்றவாறு மின்வாங்கியைத் திருகிவிட்டாலொழிய ஓசை ஏனைய இடங்களுக்கு எட்டாது. அன்றியும் அயலான் ஒருவன் குறுக்கிட்டு இவ் அலைகளிற் செய்தியைத் தாங்கிச் செல்லும் அலை இன்னதென எளிதில் அறிந்து கொள்ள முடியாது. ஒரு விநாடிக்கு நூற்றெண்பத்தாறாயிரம் கல்தொலைவிற்கு மேல் விரைந்து செல்லும் இவ் அலை ஒவ்

வொன்றையும் சோதித்துப்பார்ப்பதற்குள் செய்திகள் குறிப்பிட்ட இடங்களுக்குப்போய்ச் சேர்கின்றன.

ரேடியோவை மக்களுக்குப் பயன்படும்படி சிறந்த முறையில் அமைப்பதற்கு (Edison) எடிசன் (Flemming ஃபிளெம்மிங் (De Forest) டிஃபாரஸ்ட் முதலிய மின்சார வல்லுநர்கள் உதவியாக இருந்தனர். 1914-ஆம் ஆண்டில் மார்க்கோனிக்கு அரசாங்கம் ஓர் அரியபட்டத்தை வழங்கிற்று. 1930-ஆம் ஆண்டில் இவர் இத்தாலி நாட்டின் பல்கலைக் கழகத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

ரேடியோவின் வியத்தகு செயல்கள் அளவற்றன ஆகும். இது பல்லாயிரக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றிவருகின்றது. திசைதப்பிச்செல்லும் கப்பல்களுக்கு இது வழிகாட்டியாக உதவுகின்றது. 1909-ஆம் ஆண்டில் ரிபப்ளிக் (Republic) என்னும் கப்பல் கடலில் மூழ்கத்தொடங்கியவுடன் ரேடியோ நிலையங்கள் இச்செய்தியை அறிந்து உதவிப் படகுகளை அனுப்பின. இதனால் 200 உயிர்கள் வரை காப்பாற்றப்பட்டன. ரேடியோவின் உதவியால் பல்வேறு நாடுகளும் ஒன்றோடொன்று எளிதில் இணைக்கப்பெற்று மக்கள் அனைவரும் ஒரே வீட்டில் இருப்பதுபோன்று எல்லாவசதிகளையும் பெறுகின்றனர்.

ரேடியோவினால் தொலைவில் உள்ளவர்களது பேச்சையும் பாட்டையும் மட்டும் கேட்கமுடியும். "டெலிவிஷன்" (Television) என்னும் தொலைநோக்கித்தந்தியின் வாயிலாக நம் வீடுகளில் இருந்துகொண்டே அயல்நாடுகளிற் பேசுகிறவர்களையும் பாடுகிறவர்களையும் நேரிற்காணலாம். இக்கருவியினால் நாம் உள்ளூரில் இருந்துகொண்டே இங்கிலாந்து முதலிய நாடுகளில் நடக்கும் பந்தயங்களையும் விழாக்களையும் கண்கூடாகக் காணலாம். இஃது என்ன புதுமை? ரேடியோவினால் எங்ஙனம் தொலைவிலிருந்து பேச்சும் பாட்டும் நம் செவிக்கு எட்டுகின்றனவோ அங்ஙனமே அங்குள்ள ஒளியும் நம் கண்ணுக்கு வந்துசேர்கின்றது. கண்போன்ற மின்சாரக் கருவியானது பாடுகின்றவர் மேல் விழும் ஒளிக்கதிர்களைப் பொறுக்கி எடுத்து மின் அலைகளாய் மாற்றி வான் வெளியிற் செலுத்துகின்றது. இவ் அலைகளைத் தொலைவிலுள்ள மின் வாங்கிகள் ஏற்றுக்கொண்டு அவற்றை மீண்டும் ஒளியாக மாற்றித் திரையின்மேல் வீசுகின்றன. இங்ஙனமாக நெடுந் தொலைவில் நிகழ்வனவற்றை நாம் கண்டுங் கேட்டும் இன்புறுவதற்கு ஏதுவாகின்றது.

---

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

## தலைமைப் பேருரை

சித்தாந்த ஆசிரியர் ந. சிவகுருநாத பிள்ளை யவர்கள்.

(முன் ௯0௨ ஆம்- பக்கத் தொடர்ச்சி)

### ௮. சித்தாந்த முத்தி

சித்தாந்தத்திற் கொள்ளப்படும் முத்தி இருவகைப்படும். அவை பத முத்தி பர முத்தி யென்பனவாம். தாதமார்க்கமாகிய சரியையினை அநுட்டிப்போர் சிவசாலோகத்தையும், சற்புத்திரமார்க்கமாகிய கிரியையினை அநுட்டிப்போர் சிவசாமீபத்தினையும், சகமார்க்கமாகிய யோகத்தை அநுட்டிப்போர் சிவ சாரூபத்தையும் அடைவர். இம்மூன்றும் பதமுத்தியென்று சொல்லப்படும். இனிச் சிவஞானத்தை அநுட்டிப்போர் இறைவனுடைய எண் குணங்களும் தம்மாட்டுப் பதியப் பெற்றுச் சிவசொரூபமாய் விளங்கும் சிவசாயுச்சியப் பேற்றையடைவர். இந்திரலோகம், பிரமலோகம், விண்டுலகம் என்று சொல்லப்படும் உலகங்களை யடைதல் முத்தியிலையென்று சொல்லத்தக்கதன்று; அவை சொர்க்கங்கள் என்று சொல்லப்படும். "தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே" என்னும் தேவாரத் திருவாக்கும், "மாலயன் பெறு பதத்தையும் பொருளென மதியேன்" என்னும் கந்த புராணத் திருவாக்கும் ஈண்டு சிந்திக்கத்தக்கன.

### ௯. வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்

திருமூல நாயனார் திருமந்திரத்தில்:

> "வேதமோ டாகமம் மெய்யா மிறைவனூல்
> ஓதும் பொதுவும் சிறப்பு மென்றுள்ளன
> நாத னுரையிவை நாடிலிரண் டந்தம்
> பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே"

எனக் கூறியுள்ளார். இவ்வுண்மை கடைப்பிடிக்காத வைதிக சமயத்தார்கள் வேதத்தைமட்டும் கைக்கொண்டு சிவாகமங்களைக் கைக்கொள்ளாத காரணத்தால் வேதோபநிடதங்களிற் கூறப்படும் உண்மைகளைத் தெள்ளிதின் உணர்ந்துகொள்ளக்

கூடாதவர்களாயிருக்கின்றார்கள். அவர்களாலறியப் படாத உண்மைகள் சித்தாந்தத்தில் விளங்க உரைக்கப் பெற்றிருக்கின்றன. "ஏகம் பிரமம்" என்னும் ஒரு வாக்கியம் உபநிடதத்திற் காணப்பெறுகின்றது. இவ்வாக்கியத் திற்கு வைதிகர்கள் "பிரமப் பொருள் ஒன்றைத் தவிர வேறு பொருள்கள் கிடையா" வென்று ஏகான்மவாதஞ் சாதிப்பாராயினர். ஏகம் பிரமம் என்னும் வாக்கியத்தின் பொருள் அஃதன்று என்பதை நமது மெய்கண்டசிவம் சிவஞானபோதத்தில் "ஒன்றென்ற தொன்றே காண் ஒன்றே பதி" அதாவது பிரமங்கள் பல இல்லை, பிரமம் ஒன்றே யுள்ளது என விளக்கியருளினர். இனி "ஏகமேவாத்வி தீயம் பிரமம்" "சிவமத்வைதம் சாந்தம்" என்பனவாதிய வாக்கியங்களினுள்ள அத்வைதம் என்னும் சொல்லினுள்ள அகரத்திற்கு இன்மைப் பொருள்கொண்டு ஏகம் பிரமம் என்ற பொருளிலேயே இதனையும் வழங்குவாராயினர். சிவ ஞானபோதத்தில்,

> "பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
> எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம்—அண்ணல்தாள்
> அத்துவித மாதல் அருமறைக ளொன்றென்னாது
> அத்துவித மென்றறையு மாங்கு"

என, அதாவது பண்ணும் அதன் ஓசையும், பழமும் அதன் சுவையும் எங்ஙனம் பிரிக்கப்படாத குணகுணிப் பொருள்களாயிருக்கின்றனவோ அவற்றைப்போல இறைவன் உலகுயிர்களை இயக்குதற் பொருட்டு அவற்றொடு பிரிக்கப்படாத நிலையிற் கலந்து நிற்றலே அத்வைத சம்பந்தமென்று விளக்கி யிருக்கும் வாய்மை பாராட்டற்குரிய தன்றோ? இது பற்றியே தாயுமான சுவாமிகள் "பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித-மெய்கண்ட நாதனருள் மேவுநாளெந்நாளோ" என மெய்கண்டசிவத்தைப் போற்றுவாராயினர். மாதவச் சிவஞானயோகிகள் சிவஞான போதச் சிற்றுரையிலும், சிவஞானமாபாடியத்திலும் அத்துவித உண்மை பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்து உண்மைப் பொருளை வெளியிட்டிருக்கின்றார்கள். அவற்றைச் சைவ மக்களுணர்ந்து இன்புறுவாராக. இனிப் "பிரமாகமம்" "சிவோகம்" எனச் சீவர்கள் தம்மைப் பிரமமாகச், சிவமாகப் பாவிக்க உபநிடதங்களில் விதிக்கப்பெற்றிருக்கின்றது. வைதிகர்கள், சீவர்களெல்லாம் பிரமசொரூபமே யாதலின் தான் பிரமம் என்பதை உணர்ந்து கொள்ளுவதற்காகவே இங்ஙனம் பாவிக்கும்படி விதிக்கப்பெற்றிருக்கின்றதென்று கூறுகின்றார்கள். பிரமம் தன்னையே தான் என்று பாவிப்பதனால் வரும் பயன் யாதுமில்லை. அல்லதூஉம்

பாவனையென்னுஞ் சொற்குப் பொருளாமாறுமில்லை. இனி இப் பாவனையின் விசேடத்தை,

> "கண்டவிவை யல்லேனு னென்றகன்று காணக்
> கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த
> தொண்டினொடு முளத்தவன்ரு னின்றகலப் பாலே
> சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
> விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
> விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
> பண்டைமறை களுமதுநா ஞனே னென்று
> பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே."

எனச் சிவஞானசித்தியார் திருவிருத்தம் சிவோகம் பாவனையி னுண்மையையும், பயனையும் எவ்வளவு தெளிவாக விளக்கியிருக்கின்றது காண்மின் அன்பர்களே.

## கய. சைவ சமயாசாரியர்கள்

அருமையும் பெருமையும் வாய்ந்த நமது சைவ சமயத்தை வளர்த்தருளிய ஆசாரியர்கள் இருவகையினராவர். அவர் சமயாசாரியர், சந்தாஞசாரியர் என்பவராவர். சமயாசாரியர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் நால்வராவர். இந்நால்வரும் இறைவன் திருவருள் நேரே கைகூடப்பெற்றவர். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமிழ்நாடு முற்றிலும் பரவியிருந்த புறச்சமய இருளைக் களைந்து சைவ சமயத்தை நிறுவியருளினுர். திருநாவுக்கரசு சுவாமிகள் மாற்ருர்கள் தமக்குச் செய்த கொடுமைகளை யெல்லாம் வென்று சைவசமயத்தை நிலைநாட்டி யருளினுர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சைவ சமயத்தை நன்கு பாதுகாத்து அறுபான்மும்மை நாயன்மார் வரலாறுகளைத் திருத்தொண்டத்தொகையால் விளக்கி யருளினுர். மாணிக்கவாசக சுவாமிகள் புத்தரை வாதில் வென்று சைவ சமயத்தை நிலைநிறுத்தி யருளினுர். அன்றியும், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் முதலிய மூவரும் தமிழ் நாடெங்குஞ் சென்று திருத்தலங்களை வழிபட்டு வேதாகம உண்மைகளைத் தேவாரத் திருமுறைகளால் வெளியிட் டருளினுர்கள். மாணிக்கவாசக சுவாமிகள் பத்திச்சுவை ததும்பும் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் பாடி யருளினுர்கள். சைவசித்தாந்த உண்மைகள் திருவாசகத்தில் பொன்னே போல்மிளிர்ந்துகொண்டிருக்கின்றன. இனிச் சந்தாஞசாரி

யர்கள் மெய்கண்ட சிவாசாரியார், அருணந்தி சிவாசாரியார், மறை ஞானசம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார் என்னும் நால்வராவர். கல்லாலின்புடையமர்ந்த தென்முகக் கடவுள் திருநந்திதேவருக் கருளிச்செய்த ஞான உபதேசத் தைத் திருநந்திதேவர் சனற்குமார முனிவருக்கும், அவர் சத்தியஞான தரிசினியாருக்கும், அவர் பரஞ்சோதிமுனிவருக் கும் உபதேசித்தருளினர். பரஞ்சோதி முனிவர் அவ்வுப தேசத்தைத் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்த மெய்கண்டதேவருக்கருள, அவர் அருணந்திசிவாசாரியருக் கும் அவர் மறைஞானசம்பந்தருக்கும் அவர் உமாபதிசிவா சாரியாருக்கும் உபதேசித்தருளினர். இங்ஙனம் ஒருவருக்குப் பின் ஒருவர் குருவும் மாணவருமாக வந்த முறைமையால் சந் தானுசாரியர் என்று சொல்லப்படுவர். மெய்கண்டதேவர் சிவஞானபோதம் என்னும் ஒப்புயர்வற்ற நூலையும், அருணந் திசிவாசாரியார் சிவாகமங்களுக்கெல்லாம் உரையாணியாகத் திகழும் சிவஞானசித்தியார், இருபாவிருபஃது என்னும் இரு நூல்களையும், உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாச முதலிய எட்டு நூல்களையும் செய்தருளினர். இந்நூல்களெல்லாம் சைவசித்தாந்த உண்மைகளைத் தெள்ளிதின் விளக்கும் ஞான நிலையங்களாகவுள்ளன.

## கக. வேண்டுதல்

அன்பர்களே, நமது சைவசமயத்தின் பெருமைகளையும், முறைமைகளையும் ஒருவாறு உங்கள் திருமுன் தெரிவித் தேன். நமது சமயம் குருட்டு நம்பிக்கையுடைய கொள்கை களையாவது, வெறும் புராணக் கதைகளையாவது போதிப்பது அல்ல. அதன் ஒவ்வொரு கொள்கையும் அளவைப் பிர மாணங்கட்கு ஒத்ததே. மேலைநாட்டாரால் புதிதுபுதிதாக நுணுகி ஆராய்ந்து உரைக்கப்பெறும் தத்துவ உண்மைகளை யெல்லாம் சைவசித்தாந்த சாத்திரங்களிற் கண்டறியலாம். சைவ சமயம் விரிந்த கொள்கைகளை யுடையதென்பது, நாத்திக சமயத்தையும் ஒதுக்கித் தள்ளாது அதனையும் தன்னை யடைவதற்குப் முதற்படியாகக் கொள்ளுவதால் நன்கு விளங்கும். விண்ணவர் இந்திரன் பிரமன் முதலிய தேவர்களும், அகத்தியர் முதலிய முனிபுங்கவர்களும், பிற் காலத்துப் பட்டினத்தார் முதலிய ஆன்றோர்களும் சைவ சமயத்தையே கைக்கொண்டொழுகி யுள்ளார்கள். நமது தமிழ் வேந்தர்கள் சைவ சமயத்தை வளர்ப்பதற்குக் கோடி கோடியாகப் பொருட்செலவு செய்து சிவாலயங்களை யும், சைவ மடாலயங்களையும் நிறுவி யிருக்கின்றார்கள்

சைவ சமயத்தில் சாதி குலம் பிறப்பென்னும் தடஞ்சுழி யில்லையென்பது அறுபான் மும்மை நாயன்மார் சரித்திரங் களால் நன்கு விளங்கும்.

நமது சைவ சமயத்தில், ஆண்மக்கட்கு எவ்வளவு உரிமைகளுண்டோ அவ்வளவு உரிமைகளும் பெண்மக்கட்கு முண்டு. நாம் தொழும் தெய்வங்களாக மங்கையர்க்கரசியார், திலகவதியார், காரைக்காலம்மையார் முதலிய பெண்பாலர் நமது சமயத்திற் போற்றப்படுகின்றனரன்றோ? ஆதலின் நமது சைவ மங்கையர்கள் சைவத்தை வளர்ப்பதற்கு வேண் டும் துணைபுரிதல் வேண்டும். இனி, இளைஞர்களுக்கும் நமது சமயத்தில் பங்குண்டு. திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி கள், மெய்கண்டதேவர் முதலியோர் இளைஞர்களன்றோ? அவர்கள் நமது சைவ சமயத்திற்குச் செய்த தொண்டுகளைச், சைவ இளைஞர்களே! நோக்குங்கள். நீங்கள் தற்காலத்தில் முனைந்து செய்யும் பல தொண்டுகளுள்ளும் உயிர்க் குறுதி பயக்கும் சமயத் தொண்டினைத் தலைமையாகக் கொண்டு உங் கள் சைவ சமயத்தைப் போற்றுங்கள்.

இனி, இக்காலத்தில் நமது சமயமக்களின் நிலை மிகப் பரிதபிக்கத் தக்கதாயிருக்கிறது. ஒருவர் நுமது சமயம் யாதென்றால் இந்துசமயம் என்று சொல்வார்களே யல்லாமல் சைவசமயம் என்று சொல்ல அறியார்கள். நமது சமயக்கட வுளர் பெயரோ, ஆசாரியர்கள் பெயரோ, சாத்திரங்களின் பெயரோ சொல்ல அறியார்கள். என்னே பரிதாபம்!

சைவ அன்பர்களே,

உங்கள்பால் அடியேன் சிறு விண்ணப்பம் ஒன்று செய்து கொள்ளுகின்றேன். உங்கட்குப் பிறப்புரிமையுடைய சைவ சமயத்தைப் போற்றுங்கள். உத்தியோகத் துறையினின்றும் திரும்பிய பின் கிளப்புகளிலோ, பந்தடி மேடையிலோ, சினி மாவிலோ கழிக்கும் நேரத்தில் ஒரு சிறுகூறு சைவநூல்களைப் படிப்பதற்கு என்று ஒதுக்கி வைத்துக்கொண்டு இயன்ற தொரு நூலைப் படியுங்கள். நமது ஆண்டவனாகிய சிவபெரு மானை ஒரு கணமாவது சிந்தியுங்கள். திருநீறு உருத்திராக்க முதலிய சிவசின்னங்களைக் கூசாது அணியுங்கள். அங்ஙனம் அணிவோரையும் சமயாசாரங்களில் ஒழுகுவோரையும் இகழா தீர்கள். உங்கள் சமயத்தைப் பிறர் இகழ்வாராயின் அதனைச் செவியில் கேளாதீர்கள். இயன்றவரை ஒழுங்கான முறையில் அதனைத் தடுக்க முயலுங்கள். எந்தெந்த வழிகளிலெல்லாம் சைவ சமயத்தை வளர்க்க இயலுமோ அவ்வவ் வழிகளிலெல்

லாம் வளருங்கள். உங்கள் சமயமக்களைப் பிறசமயிகள் கொள்ளை கொள்வதைத் தடுக்க முந்துங்கள். இங்ஙனமெல்லாம் செய்வீர்களாயின் ஆண்டவன் உங்கட்கு எல்லா நலன்களையும் தந்தருளுவான்.

## ௧௨. முடிவுரை

**பெரியோர்களே,**

உங்கள் திருமுன்பு தலைமைக்குரிய கடப்பாட்டை நிறைவேற்றுவான் என் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் பதினொரு பொருள்களைப் பற்றிப் பேசியிக்கின்றேன். நான் முன்னரே விண்ணப்பித்துக் கொண்டபடி அவற்றிலுள்ள குற்றங்களை நீக்கிக் குணமுளவேல் அவற்றை மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன். நமது சமயம் அதன் சிறப்புக்கேற்பச் சமய அரசாய்த் திகழும்படி செய்யவேண்டியது சமாஜத்தையும் உங்களைப்போன்ற மெய்யன்பர்களையும் பொறுத்த கடமையாயிருக்கின்றது. நமது சமய நூல்களும் பெரும்பாலும் தென்றமிழ் மொழியிலேயே அமைந்திருக்கின்றன. வடமொழி நூல்களாகிய சிவாகம முதலியவைகளும் கிரந்த லிபியில் இருப்பதால் வடநாட்டார் அவற்றின் உண்மைகளைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. நம் தமிழ்நாட்டின் அண்மையிலுள்ள தெலுங்கு, மலையாளம், கன்னட முதலிய நாடுகளிலுள்ளவர்கட்குங்கூட நமது சமயஉண்மையோ, சரித்திரங்களோ தெரிவதில்லை. காலஞ்சென்ற பெரியார்களாகிய ஜே. எம். நல்லசாமிப் பிள்ளையவர்களும், முதலியார் சபாரத்தினம் அவர்களும் சிவஞானபோதம், சித்தியார், திருவருட்பயன் முதலிய நூல்களையும் சித்தாந்த உண்மைகளை விளக்கும் நூல்களையும் முறையே ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார்கள். இப்பொழுது ஆங்கில மொழி உலகமெல்லாம் பரவியிருப்பதால் ஆங்கிலத்தில் நமது சமய உண்மைகளை வெளியிடுவோமானல் உலகமெல்லாம் அது பரவுதற்கு ஏதுவாயிருக்கும். நமது சமாஜம் சைவ சாத்திரங்களையும், திருமுறைகளையும் அச்சிட்டு அடக்க விலைக்குத் தமிழ் நாடெங்கும் பரவச்செய்த நன்றிக்குச் சைவ உலகமும் தமிழ் உலகமும் என்றும் மறவா நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றன. இனி வரும் ஆண்டில் ஆங்கிலத்தில் நமது சமய உண்மைகளை வெளியிடவேண்டிய திருத்தொண்டை நமது சமாஜம் கைக்கொள்ள வேண்டுகிறேன்.

சைவசித்தாந்தமும் ஆங்கிலமும் நன்குணர்ந்த திருவாளர்கள் ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள், ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் போன்ற பெரியார்கள் பலர் சமாஜ முக்கிய உறுப்பினர்களாக விருப்பதால் அவர்களெல்லாரும் அவ்

வேலையை எளிதில் செய்யக் கூடும். எல்லாச் சைவமக்களும் சமாஜத்திற்கு வேண்டும் துணைபுரிவார்களாக.

**பெரியோர்களே,**

இதுகாறும் என் புன்மொழிகளைச் செவிமடுத்த உங்க ளனைவருக்கும், தலைமைப் பதவியை எனக்கு அளித்த சமாஜத் தார்கட்கும் என் முழுநன்றியையும் செலுத்துவதுடன், என்னை யாட்கொண்ட திருஞானசம்பந்தப் பெருமான் திருவடிகளை யும், எல்லாவற்றிற்கும் நிமித்த காரணமாயிருந்து முடித்து வைக்கும் எல்லாம் வல்ல கச்சியேகம்பப் பெருமான் கழலிணை களையும் முப்போதும் இறைஞ்சுகின்றேன்.

"என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்"

திருச்சிற்றம்பலம்

---

[புதுக்கவி]

## "சேந்தமிழ்ச் செல்வி" கலித்துறை.

[யாழ்ப்பாணத்து நவாலியூர். க. சோமசுந்தரப் புலவர்]

காப்பு

பூமகள் கேள்வன் மணியுந்தித் தாமரை பூத்தவயன்
மாமறை நாவினும் வெண்டா மரையிலும் வாழுமெங்கள்
பாமகள் சேவடி போற்றிப் பசுந்தமிழ்ப் பாப்பகர
ஓமரு வாதி விநாயகன் பொன்னடி யுச்சியவே.
அஞ்சு தலையுடைத் தாறு தலையடைந் தன்பருய
அஞ்சு தலையுடை யாறு தலையடைத் தாரருளும்
அஞ்சு தலையுடை யாறு தலையுடை யாற்றொழுதே
அஞ்சு தலையுடை யாறு தலைப்பா வறைகுவனே.
வாடும் பயிருக்கு மாமழை போலென் மலக்கொடுமை
ஓடும் படிக்கும் கருணை சுரந்த வுயர்குருவின்
தேடுந் திருவடி சிந்தையிற் கொண்டு செழுந்தமிழாற்
பாடும் பணிதந்த பாரதி பாதங்கள் பாடுவனே.

நூல்

திருவளர் தாமரை போலும் முகமுஞ் செழுங்குவளை
மருவளர் நோக்கமுஞ் செந்துவர் வாயும் மதிநுதலும்
தருவளர் செங்கரம் நான்குஞ் சிலம்பணி தாள்களுமாய்
உருவளர் பூங்கொடி யொன்றென் விழிக்கு ளொளிர்கின்றதே.

தாமரை போலுங் கரத்தா லெடுத்துத் தழுவியிரு
தாமரை போலும் விழியாற் குறித்துச் சலங்களழித்
தாமரை நாழிகை யும்மற வாவர மங்கமலத்
தாமரை நாவிற் பசுங்கொடி யேயென்றுந் தந்தருளே. 2

பழகிய பைந்தமிழ்ப் பாவாணர் கூறும் பனுவலினும்
வளவிய நான்முகன் நாவினும் நான்கு மறையகத்தும்
இளகிய வன்பர்கள் நெஞ்சினும் பூத்தென் சிரத்தொளிரும்
அழகிய "செந்தமிழ்ச் செல்வியின்" நூபுரத் தம்புயமே. 3

தூண்டா விளக்கம் பிறவாத முத்தஞ் சுடரரவந்
தீண்டா மதியம் கடையாது தோற்றிய தெள்ளமுதம்
மாண்டாலுங் கூடத் தொடரும் வழித்துணை வஞ்சனெனை
ஆண்டா தரித்தவெண் டாமரைத் தண்டமி ழாரணங்கே. 4

குணந்தரும் மெய்யன்பர் கூட்டந் தருங்கொடுக் கக்குறையாப்
பணந்தரும் பைந்தமிழ்ப் பாவொரு நான்கும் பகரத்தரும்
கணந்தருங் கல்வி தருஞ்சிவ மான கதியுந்தரும்
மணந்தரும் வெண்டா மரைவாழு மன்னை மலர்ப்பதமே. 5

சுணங்கும் வடமுஞ் சுமந்திறு மாந்த துணைமுலையும்
இணங்குந் துடியிடை யும்பணைத் தோளு மெழிலமுதும்
பிணங்கும் மொழியு மடித்தா மரையும் பெரிதுமன்பால்
வணங்கும் வரமருள் வாய்தென் பொதிய வரைமயிலே. 6

விற்காட்டி வேறிரு வேல்காட்டிப் பொல்லா வினைவிடிய
எற்காட்டும் வாணி முகமதிப் பேடகத் தின்மதுரச்
சொற் காட்டுந் துப்பிதழ்ச் செப்பிலுன் முத்தந் தொகுத்திருக்கப்
பற்காட்டிச் செல்வர்கள் பாற்போ யிரத்தல் பழவினையே. 7

குடையுந் தனுவும் புரவியும் மன்மதன் குஞ்சரமும்
படையுந் திருமுக மும்நுத லும்சுவைப் பான்மொழியும்
மிடையுங் குழலும் மெனவுடை யாண்மழை மின்னலஞ்சி
இடையு மிடையுடை யாள்கலை வாணி யிளமயிலே. 8

மயிலே மடப்பிடி யேதமி ழூறும் மழலைமொழிக்
குயிலே குலக்கொடி யேவினை வேலை குடித்தெழுந்த
வெயிலே நிலவுமிழ் மேனிமின் னேயென் மிடிகெடுக்கும்
அயிலே யுனதிரு தாளன்றி யில்லை யடைக்கலமே. 9

காரே நறுங்குழல் வில்லே திருநுதல் காமரயிற்
கூரே கயல்விழி கொம்பே துடியிடை கோங்கரும்பின்
சீரே வனமுலை பாகே சுவைமொழி தீங்ககற்றிப்
பாரே மதிக்க வெனையாண்ட வெள்ளைப் பசுங்கிளிக்கே. 10

வார்க்குங் குமக்கொங்கை யும்பணைத் தோளும் வலியமிடி
தீர்க்குங் கருணை விழியுஞ்செவ் வாயுந் திருமுகமும்
ஆர்க்குந் தமிழ்மறைக் கிண்கிணிக் கால்களு மாகவியான்
பார்க்குந் திசைதொறு நிற்பாள்சொற் பாவை பயங்கெடுத்தே. 11

பூமகள் கூறும் புகழ்மக ளின்பம் புரியுமகள்
பாமகள் யாரும் பணியும் மகள்பணி போனிறத்து
நாமகள் நல்லுயிர் நாவினி நன்கு நடனமிடும்
மாமகள் தாமரைக் கண்ணனுக் கென்றும் மருமகளே. 12

தூக்குந் தமிழ்த்துறை யேறிய தொண்டர்க டுன்பமெலாம்
போக்கு மலர்மிசைப் புத்தமு தேபுன்மைப் பொங்கிருளை
நீக்குஞ் செழுஞ்சுட ரேயென்று நாவினி னின்றுரையை
ஆக்கு முயிர்த்துணை யேமடி யேனுன் னடைக்கலமே. 13

நாவா லெடுத்துச் செவியா லருந்தநன் னெஞ்சகமே
மேவா வினிப்ப துயிர்ப்பிணி தீர்ப்பது விண்ணவர்க்கும்
ஆவா கிடைத்தற் கரியது பாற்கட லன்றுபெறு
மூவா மருந்தது வெண்டா மரைமேன் முளைத்ததுவே. 14

வாசப்பட் டாடை யுடையுந் திருமுக மண்டலமும்
பூசப்பட் டேயொளிர் பூங்குழற் காடும் புதுநகையும்
ஓசைப்பட் டோதிம மென்ன மிழற்றுஞ் சிலம்படியும்
ஆசைப்பட் டேனன்னை யேயினிக் காட்டி யருளுதியே. 15

காமன் கரத்தது செந்துவர் வாயது கட்டுவது
பூமன்னு திங்கண் முகத்திற் பொலியும் புயல் நிறத்து
மாமன் கரத்தது கண்டமிருக் கையும் மாமதலைத்
தாமன் குளித்ததும் மார்பின செந்தமிழ்த் தையலுக்கே. 16

திருவுறை செங்கரம் நான்கி னொருகை செகமுண ர
அருமறைப் புத்தக மேந்திய தன்ப ரகம்விளங்க
உருவுறை மாலை யிணைக்கரங் கொண்ட துவையிரண்டும்
வருமுறை யாழின் நரம்பு தெரித்து வருடியவே. 17

எப்போதும் போகாக் கலைவாணி பாத மிரண்டுமென்றும்
முப்போதும் போதுகொண் டேத்துவி ரேல்முடி மன்னரெலாங்
கைப்போதுங் கூப்புவர் செல்வங் கதிக்குமிக் காசினியில்
எப்போதுஞ் சீருண் டிறந்தால் மறுமையி லின்பமுண்டே. 18

திருமுத்த மாலையுஞ் சந்தனச்சே றுந்திளைக் குங்கொங்கை
உருமுத்த வெண்ணகைச் சூடகச் செங்கை யுயர்கருணை
தருமுத் தமகுணத் தாயே யெனையெடுத் துத்தழுவி
ஒருமுத்தந் தாவறி யாமையும் நோயு மொழிந்திடவே. 19

ஒப்பிதழ்த் தாமரைப் பூவென் றுரைக்கு மொளிமுகத்துத்
துப்பிதழ்ச் செப்புத் திறந்து சுடர்முத்தங் காட்டி முன்செய்
தப்பித மெலாம் பொறுத்துன் மடிமிசைத் தந்துவினை
வெப்பித மாக வருளமு தீகலை மெல்லியலே. 20

வானும் புவியும் புனலுங் கனலும் வளியுமிய
மானு மிருசுட ருங்கலந் தென்விழி மன்னிநின்றுள்
தேனுங் கரும்பு மமுதும் புறங்கண்ட தெய்வமொழி
மானுஞ் சுரும்பும் விரும்பும் விழிக்கலை வாணுதலே. 21

ஆவிக் கருந்துணை யாந்தமிழ்ச் செல்வி யருள்வடிவிற்
காவிக் கருங்கணும் வள்ளைக் குழையுங் கதிர்முகமும்
தூவிக் குலமயிற் சாயலும் பாதத் துணையுநெஞ்சிற்
பாவிக்குந் தோறு மமுதூறி யின்பம் பயந்திடுமே. 22

ஊனு ருடம்பிற் பிணிக்கொரு கோடி மருந்துரைத்தார்
ஆனு வுயிர்ப்பிணிக் கேற்ற மருந்தொன் றறிந்துரைப்பேன்
மானர் விழியுங் குயிலார் மொழியும் மருவிவெள்ளைத்
தேனர் கமலத் திருக்கும் பிராட்டி திருவடியே. 23

வஞ்சந் திருத்திப் பொறுமையுங் கோபமும் மாற்றியென்றன்
நெஞ்சந் திருத்தி யொளிவிளக் கேற்றி நினதுபதக்
கஞ்சம் பொருத்திக் கதிதரு வாய்கம லத்துறையும்
அஞ்சந் திருத்து நடையாய் பலகலை யாய்மயிலே. 24

ஒருகணப் போதுந் தரியாத வின்பத் துழலுமென்னை
அருகணைத் தென்று மழியாத வின்பத் தழுத்திவைப்பாய்
இருகணு ணின்ற வொளியே யினமென வெண்ணியனக்
குருகணை கோல நடையாய் நறுந்தமிழ்க் கோமளமே. 25

மாதங்க மேனி வடிதங்கு வேலிரு மைவிழிகள்
சூதங் கெழுந்த புணர்முலை மின்னல் துடியிடையாம்
ஏதங் கெடுத்தெனை யாண்ட பனுவற் பிராட்டியிரு
பாதங்கள் நீரினிற் பூவா தலர்ந்திடும் பங்கயமே. 26

தண்டே ழெழுக்கி யரியுறல் போற்றண் ணளியிலிற்றிக்
கொண்டாடு மன்பினர் கூடுத லாற்குலத் தாமரையும்
வெண்டா மரையாள் பதமுமொப் பென்னிலும் மென்மலருக்
குண்டே விரிந்து குவிகின்ற தாகுமொரு குறையே. 27

பண்டே குறைகொண் டெம்பிற் கறைகொண்டு பாம்பொருநாள்
உண்டே யுமிழ்கின்ற வெச்சிலை யோவுயர் பாவலர்கள்
கண்டே கனிந்து பவளம் விரிந்து கதிரரும்புந்
தண்டா மரையாள் முகதா மரைக்கொப்பு சாற்றியதே. 28

அவியாச் செழுஞ்சுட ராய்நெஞ் சகத்தே யமர்ந்தெனது
கவியா தரிக்குங் கலைப்பெரு மாட்டி கதிர்முகத்தே
குவியாக் குவளையுங் கோவாத முத்துங் குரைகடலுற்
பவியா வமுதும் பவளமுங் கூடிப் பயில்கின்றவே. 29

போகாத செல்வம் புரிவாளைப் புத்தமு துக்குவமை
ஆகாத செஞ்சொ லருள்வாளை யன்றழன் மீதமர்ந்து
வேவாது நின்று விளையாடி னாளை விரும்பினல்லாற்
றேகாதி வஞ்சஞ் துறக்கரி தென்பர்செந் நாவலரே. 30

## தனியன்

தவந்தரும் மேலாந் தனந்தரும் இன்பந் தருந்தணியா
நவந்தரு சீர்தரும் நட்புத் தரும்நல்ல வாழ்வுதரும்
பவந்தரு தீவினை வேரும் மரமும் பறித் தழியாச்
சிவந்தருஞ் "செந்தமிழ்ச் செல்வியின்" ஞானத் திருவடியே.

---

# சில அறிவுரை

1. உனது நினைப்பின் தொகுதியே உன் வாழ்வில் அமையும் ஒழுக்கம்.

2 காரணம் இன்றிக் காரியம் தோன்றாமைபோல நினைப்பின்றிச் செயல் உண்டாகாது.

3. நினைப்பில்லாச் செயல்போல சில தோன்றினும் உற்று ஆராயின் அவை நெடுநாள் பழக்கத்தால் அடங்கி நிற்கும் நினைப்பிலிருந்தே தோன்றுகின்றன வென்றுணர்க.

4. நேர்மையான—செம்மையான நினைப்புக்களை இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருந்தால் நேர்பட ஒழுகும் வன்மை ஏற்படும்.

"பெருமையும் சிறுமையும் தான்தர வருமே"

5. மிக மேன்மையான—செல்வநிலையுள்ள எவரையும்—முயன்று பேறுபடைத்த எவரையும்—ஒழுக்கத்தால் உயர்நிலையுற்ற எவரையும்—விட மேலான செல்வவாழ்வு, முயற்சிப் பேறு, உயர்நிலை அடைய விரும்புவையாயின் உனது விருப்ப நெறியில் வெற்றியடைந்த பெரியார் வரலாறுகளை மன அமைதியொடு படித்து ஆழ்ந்து சிந்திக்க.

6. உயர்வான—மேன்மை யடையத்தக்க—செம்மையான நிலையினையேபற்றி சிந்திக்க. இடைவிடாது உன்னுக.

"உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து"—வள்ளுவர்.

7. உயர்வான நினைப்பினை இடைவிடாமல் நினைக்க மறவாதே. ஆனால் உன்னைப் பற்றியும், உனது நிலையினைப் பற்றியும் வியந்து, புகழ்ந்து முனைப்புறாதே.

8. நன்மைமிக்க பயன் நல்காத—பயன் அற்ற வறிய—தொழில்களை நினைந்தெண்ணி உள்ளத்தை வீணாகப் பாழ்படுத்தாதே. 'வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை, நயவற்க நன்றி பயவாவினை'—வள்ளுவர்.

—பா. ரா. பரமசிவ முதலியார்,
நாவரசனம்பலம்
சங்கரன்கோவில்.

# முத்தம்

காழி. சிவ. கண்ணுசாமி B. A.

ஒன்றும் ஒருவர்க் கொருபயன் நல்காய்;
அன்றி யிருவர்க் காயின் நீயே
தன்னே ரில்லாத் தனிப்பே ரின்பம் !
என்னே நின்றிறல், எழில்முத் தம்மே !!
அறியாச் சிறுவ(ன்)நிற் பெறுவா னெளிதிற்
சிறியார் பெரியா ரேவர்மாட் டும்மே;
நிறங்கிளர் காளைச் செவ்விய னாயின்
புறமறைந் தேயுனைப் பற்றிடல் வேண்டும்;
மருள்சால் முதுமை மலிந்தோ னாயின்
பொருள்நனி கொடுத்தே பெறுதல் வேண்டும்;
ஆ ! ஆ !
பாலர்தம் முரிமையே! காதலர்ப் பேறே !
வஞ்ச மனத்தாற் கொரு தஞ்ச(ம்)மே!
வஞ்சியர் வாழ்விற் குறுசேம(ம்)மே !
சாற்றவும் போமோ, ஆற்ற நின்பெருமை !!!

(கருத்து : *தனிப்பட ஒருவராயிருந்தால் முத்தத்தின் நலம் எய்தல் முடியாது. இருபாலராயின் அதனாற் பேரின்பம் பெறுவர். குழந்தைகள் அதனை எச்செலவுமின்றி ஆண் பெண்ணிருபாலார் மாட்டும் எளிதிற் பெறுவர்; வயது வந்த கட்டிளங்காளையாயின் அதனைத் தன் காதலியின்மாட்டு ஒருவரும் அறியாவகைக் கள்ளமாய்க் கவர்ந்திடல் வேண்டும்; வயது முதிர்ந்த கிழவனாயின் அதனைப் பொருள் மிகுதி கொடுத்துத் தேடிப்பெறுதல் வேண்டும். முத்தம் குழந்தைகளின் பிறப்புரிமை ! பிறர்மனை நயக்கும் வஞ்ச மனத்தானுக்குத் தன் கள்ளம் மறைக்கும் முகமூடி; காதலிகட்கோ காதலர் தங்கண் கொண்டுள்ள மாறுவன்பிற் கறிகுறி!*).

# இந்தி மொழிப்பயிற்சி ஏற்புடைத்தாகுமோ?

[பல்லாவரம் மறைத்திரு. மறைமலையடிகளார்]

இவ்விந்திய நாட்டின் வடக்கே பல ஊர்களிற் பல வகை மாறுதல்களுடன் பேசப்படும் 'ஹிந்தி' மொழியை, இவ்விந்திய நாடு முழுதுமுள்ள மக்கள் எல்லாரும் பயின்று அதனையே பொதுமொழியாக வழங்கிவரல் வேண்டுமென்று, இந்நாட்டின் நன்மைக்காக உழைக்கும் வடநாட்டு அறிஞர் பலருந் தென்னாட்டறிஞர் சிலரும் பேசியும் எழுதியும் வருவதுடன் ஆங்காங்கு இந்திமொழிப் பள்ளிக்கூடங்களுந் திறப்பித்து நடத்திவருகின்றார்கள் ஆகையால் இந்திமொழி நம் நாட்டவர்க்கு நன்மை செய்யத்தக்க நலனும் ஆற்றலும் உடையதுதானா என்பதனை முதற்கண் ஆராய்வாம்.

இப்போது, ஆங்கிலக் கல்விக் கழகங்களிற் கல்வி பயின்று வெளிவரும் நம் இந்திய மக்களிற் பெரும்பாலார் பொருள்வருவாய்க்கு வேண்டுமளவு சிறிது ஆங்கிலம் பயின்றவராயும், அதனோடு சேர்த்துச் சிறிதே கற்பிக்கப்பட்ட தமிழ் முதலான மொழிகளைத் தப்புந்தவறுமாய்ப் பேச எழுதத் தெரிந்தவராயும் வெறும் போலிவாழ்க்கையிற் சில்லாண்டுகளே உயிர்வாழ்ந்தொழிதலால், இந்நாட்டின்கட் பெருந்தொகையினராய் வெற்றுயிர் வாழ்க்கை செலுத்துங் கல்லா மாந்தர்க்குந், தமிழ் முதலான நாட்டு மொழிகளை வருந்திக் கற்றும் வறியராய்க் கார்த்திகைப் பிறைபோல் ஆங்காங்குச் சிதறிச் சிற்சிலராய்க் காலங்கழிக்குந் தாய்மொழி கற்ற மாந்தர்க்கும் ஆங்கிலங் கற்றவரால் மிகுதியான பயன் ஏதும் விளைகின்றிலது. இப்படியிருக்க, இத் தமிழ் நாட்டிலும், பிறமொழி பேசும் பிறநாடுகளிலும் அயல்மொழியான இந்திமொழிப் பயிற்சியை நுழைத்தால் அதனாற் பயன் விளையுமோ என்பதனை அறிஞர்கள் ஆழ்ந்தாராய்ந்து பார்த்தல்வேண்டும்.

இவ்விந்தியதேயத்தின் பற்பல நாடுகளிலும் உயிர்வாழும் மாந்தர்கள் பற்பல மொழிகளைப் பேசுவாராய் இருத்தலின், இந்நாட்டவரெல்லாரும் ஒரு பொது நன்மையின்பொருட்டு ஒருங்குகூடிப் பேசவேண்டிய காலங்களில் இந்தியை அவரெல்லாரும் பொதுமொழியாய்க் கையாளுதலே நன்று என்று தேயத்தொண்டர் சிலர் கூறுகின்றனர். இவரது கூற்றுப் பொருந்தாதென்பது காட்டுவாம்.

இந்தி மொழியானது வடக்கே பற்பல நாடுகளிற் பற்பல மாறுதல்களோடு பேசப்படுகின்றதேயல்லாமல், அஃ

தெங்கும் ஒரே வகையாகப் பேசப்படவில்லை. இங்ஙனம் பலவகை மாறுதல்களுடன் பெசப்படும் இந்திமொழியை ஆராய்ச்சி செய்த ஆசிரியர்கள் அதனை 'மேல்நாட்டு இந்தி', 'கீழ்நாட்டு இந்தி', 'பிகாரி' என்னும் மூன்று பெரும் பிரிவுக ளாகவும், அப்பெரும் பிரிவுகளினுள்ளே முறையே 'பாங் காரு', பிரஜ்பாஷா, 'கனோஜ்', 'பத்தேலி' உருது; 'அவதி', 'பகேலி', 'சத்தீஸ்கரி', 'மைதிலி', போஜ்புரி', 'மகதி' என் னும் பல சிறு பிரிவுகளாகவும் பகுத்திருக்கின்றனர். இன் னும் இந்தி மொழியின் பிரிவுகளாகப் பேசப்படுஞ் சிறு சிறு மொழிகள் மேலும் பற்பல உள. இவ்வாறு இந்தி மொழியின் பல பிரிவுகளாக வழங்கும் பற்பல மொழிகளைப் பேசும் பற்பல நாடுகளில் உள்ளாரும், ஒரு நாட்டவர் மொழியை மற்ற நாட்டவர் அறியாராய் உயிர்வாழ்ந்து வருதலின், இந்தி அவரெல்லார்க்கும் தெரிந்த பொதுமொழி என்றுரைப்பாருரை எங்ஙனம் பொருந்தும்? இங்ஙனம் பற் பல நாடுகளில் பற்பல மாறுதல்களுடன் வழங்கும் பலவேறு இந்தி மொழிகளில் எதனை இத்தென்னாட்டவர் கற்றுத் தேர் வது? எதனை இவர் கற்றாலும் அதனுதவிகொண்டு இவர் வடநாட்டவரெல்லாரோடும் பேசுதல் இயலுமா? இயலாதே. மேற்குறித்த இந்தி மொழிகளேயன்றிச், 'சிந்தி', 'லந்தி', 'பஞ்சாபி', 'குஜராத்தி', 'ராஜபுதானி', 'குமோனி', 'கடுவாலி', 'நேபாலி', 'உரியா', 'பங்காளி', 'மராட்டி', 'சிணு', 'காஸ்மீரி', 'கோகிஸ்தானி', 'சித்ராலி', 'திராகி', 'பஷை', 'கலாஷா', 'கவர்பாவ' முதலான இன்னும் எத்தனையோ பல மொழி களும் வடக்கே பற்பல நாட்டின்கண்ணுள்ள பற்பல மாந்தர்க ளாலும் பேசப்பட்டு வருகின்றன. இம்மக்கட் பெருங் கூட்டத்துடனெல்லாம், இந்தி மொழியில் ஒன்றைமட்டுந் தெரிந்த தென்னாட்டவர் உரையாடி அளவளாவுதல் கூடுமோ? சிறிதுங் கூடாதே; வடநாட்டவரிலேயே இந்தி மொழியை அறியாமற் பலதிறப்பட்ட பன்மொழிகளை வழங்கும் மக்கட் கூட்டம் பலவாயிருக்க, இத்தென்னாட்டவர் மட்டும் இந்தி மொழியைக் கற்றுப் பேசுதலால் யாது பயன் விளைந்திடக் கூடும்? இவ்வியல்புகளை யெல்லாம் நடுநின்று எண்ணிப் பார்க்கவல்ல அறிஞர்க்கு, இத்தென்னாட்டவர்கள் தமக்கு எவ்வகையிலும் பயன்படாததுந் தெரியாததுமான இந்தி மொழிகளில் ஒன்றைப் பொதுமொழியென வருந்திக் கற்ற லால் வீண்காலக் கழிவும் வீண் உழைப்பும் வீண் செலவும் உண்டாகுமேயல்லாமல் வேறேதொரு நன்மையும் பயனும் உண்டாகாதென்பது நன்கு விளங்கும்.

இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகளுக்கு முன்னே தொட்டுத் தமிழ்மொழியை நன்கு கற்ற ஆசிரியர்கள் முதுகுருகு, முது

நாரை, களரியாவிரை, பெரும்பரிபாடல், தொல்காப்பியம், பெருங்கலித்தொகை, குருகு, வெண்டாளி, வியாழமாலை, முத்தொள்ளாயிரம், நற்றிணை, நெடுந்தொகை, அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகை, சிற்றிசை, பேரிசை, பதிற்றுப்பத்து, எழுபதுபரிபாடல், குறுங்கலி, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, திருவாசகம், திருக்கோவையார், சீவகசிந்தாமணி, திருத்தொண்டர் புராணம், சிவஞானபோதம் முதலான அரும்பெரும் தமிழ் இலக்கண இலக்கிய வீட்டு நூல்களும், அவை தமக்குச் சொற்பொருள் நுட்பமுஞ் சுவையும் மலிந்த சிற்றுரை பேருரைகளும் இயற்றித், தமிழை மாறுத நாகரிக இளமை வளத்தில் இன்றுகாறும் இனிது வழங்கச் செய்துவருதலால், அதனை வழங்குந் தமிழ் மக்களெல்லாரும் ஒருவர் ஒருவர்க்கு நெடுந்தொலைவில் இருப்பினும் அதனாற் பேசியும் எழுதியும் அளவளாவி ஓரிடத்திலுள்ள ஒரே மக்களினம்போல் உயிர்வாழ்ந்து வருகின்றனர்.

மற்று, இந்தி, உருது முதலான வடநாட்டு மொழிகளோ தமிழைப்போற் பழமையானவைகள் அல்ல; மகம்மதிய மதத்தவரான மொகலாய அரசர்கள் வடநாட்டின்மேற் படையெடுத்துப் போந்து, தில்லிப்பட்டினத்தைத் தலைநகராய்க் கைக்கொண்டு, அதன்கண் அரசு வீற்றிருக்கத்துவங்கிய பின்னரே அம்மொழிகள் தோன்றியனவாகும். அக்காலத்தில் தில்லி நகரிலும் அதனைச் சூழ்ந்த இடங்களிலும் பிராகிருதச் சிதைவான ஒரு மொழி வழங்கிக்கொண் டிருந்தது. தில்லியில் துலுக்கரரசு நிலைபெற்றபின், அவர் கொணர்ந்த அராபிமொழி பாரசீகமொழிச் சொற்கள் அம்மொழியின்கண் ஏராளமாய்க் கலக்கப்பெற்று அவரால் அஃது உருது எனவும் பெயர் பெறலாயிற்று.

இதன்பின் நூல் வழக்குடையதாய் இஞ்ஞான்று வழங்கும் இந்தி மொழியானது 'லல்லுஜிலால்' என்பவரால் உருது மொழியினின்றும் பிரித்துச் சீர்திருத்தஞ் செய்யப்பட்டதொன்றாகும். இதற்கு முன் உள்ளதான பிராகிருதச் சிதைவுமொழியிற் கலந்த பாரசிக அராபிச்சொற்களை அறவேயொழித்துச் சமஸ்கிருத மொழிச்சொற்களை மிகுதியாய் எடுத்துச் சேர்த்து அவர் இந்தி மொழியைப் புதிதாய் உண்டாக்கினர். ஆகவே, வடசொற்கலப்பினால் ஆக்கப்பட்டுச் சிறிது காலமாக இப்போது நூல் வழக்கிற் கொணரப்பட்டிருக்கும் இந்தி மொழியை நம் தென்னாட்டவர் கற்றுத் தெரிந்து கொள்வதனால், இவர் வடநாட்டவரெல்லாருடனும் பேசி அளவளாவி விடக்கூடும் என்று சிலர் மடிகட்டி நின்று கூறுவது நம்மனோரை ஏமாற்றும் பொய்யுரையேயாம்.

கி. பி. 1400-ஆம் ஆண்டு முதல் 1470-ஆம் ஆண்டு வரையில், அதாவது இற்றைக்கு 467 ஆண்டுகளுக்கு முன்னிருந்த 'இராமானந்தர்' எனப்பெயரிய துறவி இராமனையே முழுமுதற் கடவுளாக வைத்து வழிபடல் வேண்டுமென்றகொள்கையை வடநாட்டிற் பல இடங்களிலும் பரவச்செய்து வந்தார். இவர் இராமன்மேற்பாடிய பாடல்கள்தாம் முதன்முதல் இந்திமொழியில் உண்டானவை. அதனால் அவருடைய பாடல்கள் அடங்கிய இந்திமொழி நூல் 'ஆதிகிரந்தம்' என வழங்கப்படுகின்றது.

இனி, இராமானந்தர்க்குப் பின் அவர்தம் மாணாக்கருள் ஒருவரான கபீர்தாசர் என்பவர் கடவுள் பல பிறவிகள் எடுத்தார் எனக் கூறுவது அடாதென்றும், இறைவனைக் கல் செம்பு கட்டை வடிவில் வைத்து வணங்குதல் பெருங்குற்றமாமென்றும் இந்து சமயக் கிரியைகளுஞ் சடங்குகளும் பொருளற்ற புன்செயல்களென்றும் இந்தி மொழியின் ஒரு பிரிவான 'அவதி' மொழியிற் பாடல்களைப் பாடியிருக்கின்றார்.

இனிக் கபீர்தாசருக்குப் பின் அவர்தம் மாணாக்கரான 'நாணக்' என்பவர் தம் பாடல்களைப் பஞ்சாபியும் இந்தியுங் கலந்த கலப்பு மொழியில் அமைத்துச் 'சீக்கிய' மதத்தைப் பரப்பினார்.

இனி, இற்றைக்கு 480 ஆண்டுகளுக்குமுன் தர்பங்கா மாகாணத்தின் கண்ணதான 'பிசபி' என்னும் ஊரில் 'வித்யாபதி தாகூர்' என்ற வைணவர் ஒருவர் இந்தி மொழியின் மற்றொரு பிரிவான 'மைதிலி' மொழியில் கண்ணனுக்கும் அவன் காதலி இராதைக்கும் இடையே நிகழ்ந்த காதல் நிகழ்ச்சிகளை விரித்துப் பல பாடல்களைப் பாடியிருக்கின்றார். இப்பாடல்களையே பின்னர்ப் 'பங்காளி' மொழியில் 'சைதன்யர்' என்பார் மொழிபெயர்த்து, அவற்றை வங்காள தேயமெங்கும் பரவ வைத்தனர். இதுகொண்டு, இந்தி மொழி வங்காள தேயத்தி லுள்ளார்க்குள் வழங்காமை அறியப்படுகின்றதன்றோ? வடநாட்டிற் பெரும்பரப்பினதான வங்காள தேயத்தார்க்கே தெரியாததான இந்திமொழியைத் தென்னாட்டிலுள்ளவர்கள் பயின்றாலும், இவர்கள் வங்காள மக்களுடன் அதிற் பேசி உறவாட முடியாதன்றோ?

ஆதலால், இதுவரையிற் கூறியதுகொண்டு, இந்திமொழியானது 500 ஆண்டுகளுக்குமுன் நூல் வழக்கில்லாமற், கல்வியறிவில்லா வடநாட்டு மக்களால் அந்நாட்டின் பல பகுதிகளிலும் பல்வாறு திரித்துப் பேசப்பட்டு, ஒருபாலார் பேசும் மொழி மற்றொருபாலார்க்குத் தெரியாதவண்ணம் வழங்கினமையால், அஃது இஞ்ஞான்றுங் கூடப் பற்பல மொழிகளாகவே பிரிந்து வழங்குகின்றதென்பதும், அதனால் இந்தியை வடநாட்டவர் எல்லார்க்கும் பொதுமொழியெனக் கூறுவா

ருரை மெய்யாகாதென்பதும், ஆகவே தென்னாட்டவர் இந்தியைப் பயினுதலால் அதனுதவிகொண்டு வடநாட்டவரெல்லாரோடும் உரையாடி உறவாடல் இயலாதென்பதும் நன்கு விளங்காநிற்கும்.

இனி, இந்தி மொழிகள் நாலுகோடி மக்களாற் பேசப்படுதலாகிய தொகை மிகுதியை வற்புறுத்திக் காட்டுவார்க்கு, வங்காள மொழி ஐந்துகோடி மக்களாலும், தமிழுந் தமிழோடினமான மொழிகளும் ஆறுகோடி மக்களாலும் பேசப்படும் பெருந்தொகை எடுத்துக் காட்டப்படும். இந்தியைப் பொதுமொழியாக்க வேண்டுமென்று ஒரு சாரார் கூறுவரேல், அதனினும் பெருந்தொகையினரான மக்களாற் பேசப்படும் 'வங்காள' மொழியைப் பொதுமொழியாக்க வேண்டுமென்று வங்காளரும், இவ்விந்திய நாட்டின் நால் எல்லை வரையிலும் பரவியிருக்குந் திராவிட மக்கள் எல்லார்க்கும் முதன் மொழியாவதும், இந்தியாவின் மட்டுமேயன்றி இலங்கை, பர்மா, மலாய் நாடு, தென்ஆப்பிரிக்கா முதலான நாடுகளிற் குடியேறி, வாணிகவாழ்க்கையிற் சிறந்தாராயிருக்குந் தமிழ்மக்கள் அனைவராலும் வழங்கப்படுவதும் ஆன தமிழையே பொதுமொழியாகப் பயிலல் வேண்டுமென நந்தமிழ் மக்களும் வலியுறுத்துவரல்லரோ? மேலும், வடநாட்டு இந்தி முதலான மொழிகளின் பாடல்களிற் பெரும்பாலன, நம்போற் பல பிறவிகள் எடுத்துழன்று இறந்துபோன சிற்றரசர்களான இராமன், கிருஷ்ணன், பலராமன், வசுதேவன் முதலானவர்களைக் கடவுளாக வைத்து உயர்த்துப் பாடியிருத்தலால், அவை பிறப்பு இறப்பு இல்லா முழுமுதற் கடவுளாகிய எல்லாம் வல்ல சிவத்தை மக்கள் அறிந்து வழிபட்டுத் தமது பிறவியைத் தூய்மைசெய்து உய்தற்குதவி செய்யாமையோடு, அவை உண்மைச் சிவ வழிபாட்டை அவர் அடைய வொட்டாமலுந் தடைசெய்து மக்கட் பிறவியைப் பாழாக்குகின்றன. மற்று, கலித்தொகை, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை திருவாசகம், திருக்கோவையார், தேவாரம், பெரிய புராணம், சிவஞானபோதம் முதலான தமிழ் நூல்களோ மெய்யான ஒரு தெய்வம் சிவமேயாதலை விளங்கத் தெருட்டி மக்களுக்கு மெய்யறிவையும் மெய்யன்பையும் ஊட்டி, அவர் இம்மையிலும் மறுமையிலும் அழியாப் பேரின்பத்திற் றிளைத்திருக்குமாறு செய்து, அவரது பிறவியைப் புனிதமாக்குந் திறத்தன. அதுவல்லாமலும், இந்தி முதலான வடநாட்டு மொழிகள், தமிழைப்போற் பழையன அல்லாமையாலும், அவற்றை வழங்கும் மக்கள் பழமைதொட்டு நாகரிக வாழ்க்கையில் வாழ்ந்த தமிழ் மக்களைப்போல் நாகரிக வாழ்வு வாயாதவர்களாகையாலும், சென்ற 400 அல்லது 500 ஆண்டுகளாகத்

தோன்றிய வடநாட்டுப புலவர்கள் பலரும், பண்டு தொட்டுத்தனித்த பேரறிவு வாய்ந்த தமிழ்ப் பெரும்புலவர்போலாது சமஸ்கிருத புராணப் பொய்க்கதைகளை நம்பி அவற்றின் வழிச்சென்ற மயக்க வறிவினராகையாலும், உயிர்க்கொலை, ஊனுணவு, கட்குடி, பல சிறுதெய்வவணக்கம், பலசாதி வேற்றுமை முதலான பொல்லா ஒழுக்கங்களை அகத்தடக்கிய ஆரிய நூல்நெறிகளைத் தழுவிய வடவர் அவற்றை விளக்கி அருளொழுக்கத்தையும் முழுமுதற் கடவுள் வணக்கத்தையும் வற்புறுத்தும் அருந்தமிழ் நூல்நெறிகளைத் தழுவாமையாலும், அவருடைய மொழிகளையும், அவற்றின்கட் புதிதுதோன்றிய நூல்களையும் நந்தமிழ் மக்கள் பயிலுதலால், இவர்கள் ஏதொரு நலனும் பயனும் எய்தார் என்பது இனிது பெறப்படும்.

இங்ஙனம் எல்லா வகையாலுஞ் சிறந்த **தமிழ்மொழி** இவ்விந்திய நாடு முழுமைக்கும் பொதுமொழியாதற்குரிய நலங்கள் எல்லாம் வாய்ந்ததாயிருந்தும், அதனைப் பொதுமொழியாக்க முயலாமல், நானூறு ஐந்நூறு ஆண்டுகளாகவே தோன்றிப் பழைய சிறந்த நூற் செல்வமின்றி வறியனவாய்ப் பலகைக் குறைபாடுகள் உடையனவாய்ப் பெரும்பாலும் நாகரிகமில்லா வடவர்களாற் பேசப்படும் இந்தி முதலான சிதைவுக் கலப்புமொழிகளை இத்தேயத்திற்குப் பொது மொழியாக்கவேண்டுமென்று கூக்குரலிட்டு முயல்வோர் உண்மையான தொண்டர்களாவரா வென்பதனை அறிவுடையோர் ஆழ்ந்து நினைத்துப்பார்த்தல் வேண்டும். இதுகாறுங் காட்டிய உண்மைகளால் இந்திமொழிப்பயிற்சி நந்தமிழ்நாட்டிற்கு ஒரு சிறிதும் பயன்படாமையினை யறிந்து, அதன் பயிற்சினைத் தடைசெய்து, நம் தனித் தமிழ்ப் பயிற்சியினையே எங்கும் பரவச்செய்து நந்தமிழ்மக்களைத் தம் தாய்மொழி யறிவில் விளங்கச் செய்வீர்களாக!

---

# தாகூரின் தாய்மொழி வேட்கை

## கல்கத்தாப் பல்கலைக்கழகப் பட்டமளிப்புவிழாச் சொற்பொழிவு

கல்கத்தாப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா இவ்வாண்டு பிப்ரவரி 13-ந்தேதி நடைபெற்றது. டாக்டர் இரவீந்திரநாத தாகூர் தமது பட்டவிழாப் பிரசங்கத்தை வங்க பாஷையிலேயே செய்து முடித்தார். சர்வ கலாசாலைச் சரித்திரத்தில் இப்போதுதான் முதன் முதலாக, வங்காள மக்கள் தாய்மொழியின் வாயிலாய், பட்டமளிப்புப் பிரசங்கம் செய்யப்படுகின்றது. கவியரசர் தமது பேருரையில் கூறியிருப்பதன் சாரம் கீழ் வருமாறு :—

மாணவர்களின் தாய்மொழியை நிராகரித்து, அன்னவர்களுக்கு அயல்மொழியின் வாயிலாகப் போதனை செய்யும் முறையை இந்தியாவைத் தவிர வேறெங்குங் காண இயலாது. ஜப்பான் தேசம், மேல் நாட்டுக் கல்வியைப் பயிலத் துவங்கி ஒரு நூறு வருடங்களும் ஆகிவிடவில்லை. ஆரம்பத்தில் அவர்களுக்கு அயல்மொழிகளில் எழுதப்பெற்ற பாடபுத்தகங்களின் உதவியையே நாட வேண்டியதாயிற்று. ஆனால் கற்கவேண்டிய விஷயங்கள் அனைத்தும் தமது நாட்டு மொழியின் வாயிலாகப் போதிக்கப்படல் வேண்டும் என்ற கொள்கை

ஆதிமுதலே அவர்கள் கைக்கொண்டு வந்திருக்கிறார்கள். கல்வி, குறிப்பிட்ட சில வகுப்பாரை மட்டிலும் அழகு செய்யத் தோன்றவில்லை. அஃது நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் சக்தியும், அறிவு வளர்ச்சியும் அளிக்கக்கூடியதா யிருக்கவேண்டும்; ஆதலால் நாடெங்குமுள்ள மக்கள் கல்வி யறிவுடையோரா யிருக்கவேண்டும் என்பதை ஜப்பானியர் நன்றாய் உணர்ந்து கொண்டனர்.

சமூகத்தின் முன்னணியிலிருக்கும், ஒரு சிலருக்கு மட்டிலுமே, 'இந்தியருக்குக் கல்வியளித்தல்' என்ற பிரமாதமான பெயருடன், மிகுந்த லோபகுணத்துடன் கல்விபெறும் வசதி அளிக்கப்பட்டு வருகின்றது. நமது பாக்யத்தை நிர்மாணிப்பவர்கள் தம்மைத் தாழ்த்தி வரும் முறைகளுக்கு கருணையுடன் நாம் ஆதரவு நல்கி வருகிறோம்.

நம் தேசமக்களிற் கற்றோர் கல்லாதார் ஆகிய இருவகுப்பினர்க்குமிடையே நிலவும் வேற்றுமை சகாரா பாலைவனத்திற்கும், அதன்கண் காணப்படுகின்ற சிறு ஜீவ பூமிகளுக்குமுள்ள வேறுபாட்டைப்போலவிருக்கின்றது—ஆம், அளவிலும், தன்மையிலும் அத்தகைய வித்தியாசமே காண்கின்றோம். எனவே, நாம் அனைவரும் ஒரே அரசியல் ஆதிக்கத்துக்குக் கீழ்ப்பட்டிருந்தாலும் ஒரே வகைத்தான மனோநிலையால் வசப்படுத்தப் பெற்றோமில்லை. சமீபத்தில் துர்ப்பாக்கியம் நிறைந்த நம் இந்தியாவைத் தவிர, ஜப்பான், பர்ஷியா, அரேபியா, துருக்கி முதலான மற்றெல்லா நாடுகளும், உள்நாட்டில் பிளவுகள் பிறப்பித்து மக்களின் தேசீய ஆர்வத்தை அடக்கிச் சிதைத்து வரும் மனோநிலையை அகற்றப் பெரும்பாடுபட்டுக் கொண்டிருக்கின்றன.

பெரிய பிராணிகளின் இரத்தத்தை உறிஞ்சி வாழும் ஒட்டுப் பூச்சிகளைப்பற்றி நாம் அறிவோம். இவை தாம் பற்றிக்கொண்டிருக்கும், பிராணிகளின் உடம்பிலேயே வாழ்ந்து மடிகின்றன. இவை எவ்வழியாலாயினும் தம் உயிரைக் காப்பாற்றிக்கொண்டபோதிலும், இவற்றின் அவயவங்கள் எல்லாம் வளர்ச்சி அற்று ஒரு போதும் பயன்படா நிலைமைக்கு வந்துவிடுகின்றன. நமது தற்போதைய சர்வ கலாசாலையிலுள்ள மாணவரின் வாழ்க்கையும் இவ்வண்ணமே இருக்கின்றது. இந்நாட்டுக்கல்வி அயல்மொழியின் துணையைக்கொண்டே வளர்ச்சிபெற வேண்டியிருப்பதால், அதற்குப் போதிய ஆதரவு இருந்தபோதிலும், பல துறைகளிலும் பெற வேண்டிய வளர்ச்சி குன்றிப் போய்விட்டது. எனவே கலாசாலைக் கல்வியின் பூரணமற்ற நிலைமையை உணரப்பெறுமலே கலாசாலைகள் வேலைகளை நிகழ்த்திக்கொண்டு வருகின்றன.

நாம் உட்கொள்ளும் ஆகாரத்தின் சத்தான அம்சங்கள் நமது சரீரத்துடன் கலந்து கொள்ளுவதற்கு மெல்லுகின்ற பற்களும் உணவை செரிக்கச் செய்யும் நீர்சுரப்பும் தேவைப்படுவதேபோல் கல்வி பயில ஒருவரது தாய்மொழி பயன்படுகிலது.

நான் இவ்வாறு கூறுவதால் நமது சர்வகலாசாலைகளில், ஆங்கிலத்திற்கு, அளிக்கப்பட்டிருக்கும் உயர்வு அழிந்து போகுமென நினைத்துவிடலாகாது. ஆங்கிலம் இன்று உலகத்தவரால் மதிக்கப்பட்டு வருவது ஜீவனோபாயத்திற்கு அஃது ஓர் வழிகாட்டியாய் இருப்பதாலன்று. மேல் நாடுகளில் கண்டு பிடிக்கப்பட்டு வரும்

புதுமைகளை யாண்டு பரப்புவதற்கு அம்மொழி ஓர் கருவியாயிருப்ப தால் தேசபக்தியின் பெயரால் அதை வெறுப்பது அறிவுடைமை யாகாது. அதனால் நாம் நமது அபிவிருத்திக்குரிய வழிகளை அடைத் துக்கொண்டவர்களே யாவோம்.

மேனாட்டுக் கல்வியின் பொருளையும் நுட்பங்களையும் ஏற்றுக் கொள்ளுஞ் சக்தியற்ற அறிவானது, குறுகிய நோக்கம், அறியாமை, பலவீனம் ஆதியவற்றால் மழுங்கிவிடும். அறிவுச்சுடர் எங்கிருந்து உதயமாயினுஞ் சரியே, அநாகரிக மனப்பான்மை, யெனுங் கரிய மேகங்களே அதனை மறைக்கத் துணிகின்றன. உண்மை எச் சமுகத்தாரிடை தோன்றினும், என்ன? அஃது எல்லா வகைப்பட்ட மக்களுக்கும் பொதுவேயன்றோ?

இன்று நான் உங்கள் முன்னிலையில் ஓர் முக்கியமான செய்தியை விடுக்கின்றேன். அஃது மகிழ்ச்சியும், கௌரவமும் ஊட்டக்கூடி யது. உங்கள் தாய் மொழியின் வாயிலாக மாகாண மக்களுடன் நெருங்கி வாழ்ந்து வங்காளம் தனது புகழை நிலைநாட்ட வேண்டு மென்பதே அச்செய்தியாகும். எனது மாணவப்பருவம் இக்கல்லூரி யின் கீழ் வகுப்புகளில் சுருங்கிய காலத்திற்குள் முடிந்துவிட்டது. எப். ஏ. வகுப்பில் ஓர் நாள் மட்டுமே காலடி எடுத்து வைத்தேன். வழக்கமாய் கலாசாலைக்குச் சென்று வரும் மாணவர்களுக்கு எனது பார்வையும், நடத்தையும் விபரீதமாகத் தோன்றின. அவர்கள் என்னைக் கண்டு நகைப்பதுண்டு. மறுநாள் முதல் கலாசாலைக்குச் செல்ல என் மனம் துணியவில்லை. எனது தாய்மொழிக்கு யான் செய்த தொண்டின் பயனாகவே இன்று இப் பெருமையான பொறுப்பை வகிக்க நேரிட்டது.

—"ஊழியன்"

---

## செவியில் நுழைந்திலதோ?

இவ்வாண்டு கல்கத்தா சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழா சென்ற புதன்கிழமை நடைபெற்றது. பட்டமளிப்பு விழாவின் போது சொற்பெருக்கு ஆற்றியவர் கவீந்திரரான ரவீந்திரர். அவர் எம்மொழியில் சொற்பெருக்கு நிகழ்த்தினார் என்று நினைக்கிறீர்கள்? அவர் தம் தாய்மொழியாகிய வங்காளியிலேயே அதை நிகழ்த்தினார். கல்கத்தா சர்வகலாசாலைச் சரித்திரத்திலேயே முதன் முதல் தாய் மொழியில் பட்டமளிப்புவிழாப் பிரசங்கம் நிகழ்ந்தது இதுவே. நந்தமிழ்நாட்டில் இரு சர்வகலாசாலைகள் உள. ஒன்று சென்னைச் சர்வகலாசாலை. மற்றொன்று அண்ணாமலைச் சர்வகலாசாலை. இக் கலாசாலைகளின் பட்டமளிப்பு விழாப் பிரசங்கங்கள் தாய் மொழியில் நிகழ்வுறலாகாதா? தாய் மொழிப்பித்துக்கொண்டோர் நம் நாட்டில் இல்லையா? தாய் மொழியில் பட்டமளிப்புவிழாப் பிரசங்கம் செய்யும் ஆற்றல் உள்ளவர் இலரா? அன்றேல் நம்நாட்டு மாணவர்கள் தாய் மொழிப்புற்று அற்றவர்களா? தமிழ்த்தாய் விம்மி விம்மி யழுங்குரல் உங்கள் செவியில் நுழைந்திலதோ? தமிழ் மக்காள்! தாய் மொழிப் பற்றுடைய தமிழ் மக்காள்! எழுங்கள்! விழியுங்கள்! தாய்க்கு உங்கள் கடனாற்ற விரைந்து எழுங்கள்!

('நவசக்தி')

---

# கழகப் புதிய வெளியீடுகள்

கம்பராமாயண சாரம்-பாலகாண்டம்
ராப்பர் விலை ரூ. 1-10 கலிக்கா ரூ. 2-0

அறநெறிச்சாரம் (முனைப்பாடியார் இயற்றியது)
பதவுரை விளக்கவுரைகள் அடங்கியன. விலை அணு 12

நீதிநூற்கொத்து மூலமும் உரையும் (இரண்டாம் பாகம்)
கலிக்கா கட்டடம் விலை ரூ. 1-12

வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியல் விலை அணு 6

யாப்பிலக்கணம் (விசாகப்பெருமாளையர்) விலை அணு 5

அணியிலக்கணம் ,, விலை அணு 5

சங்க நூற் சிறுகதைகள். விலை அணு 4

நூற்றெருகை விளக்கம் (சாத்திர சங்கிரகம்)
(An Introduction to Science in Tamil)
ராப்பர் விலை ரூ. 1-0
கலிக்காக் கட்டடம் ரூ. 1-4

கட்டுரைக் கசடறை அல்லது வியாச விளக்கம்
(வித்துவான் ஞா தேவநேசன்) தமிழைப் பிழையின்றி
எழுதவும் பேசவும் கற்பிக்கும் விளக்கமான அரிய நூல் 0 8

Sekkilar Periapuranam in English by
J. M. Nallaswamy Pillai 1 0

கபிலர் பாட்டுக்கள் ஆராய்ச்சியுடன் 2 8

நாநார்த்த தீபிகை (நிகண்டு) உரையுடன் 6 8

Studies in Tamil Literature and History by
Mr V. R. R. Dikshitar 5 8

அண்ணுமலைப் பல்கலைக் கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| சங்கீத ஒலிநூல் (Acoustics) | 1 | 8 |
| நவீன தர்க்கம் (Modern Logic) | 2 | 0 |
| Ramamatya's Svaramelakalanidhi (Music) | 2 | 0 |
| Bhoja Raja (P. T. Srinivasa Iyengar) | 1 | 8 |
| Factory Labour in India | 3 | 0 |
| Tattva Bindu (Sanskrit) | 3 | 0 |
| Svarasiddhanta Candrika (Sanskrit) | 5 | 0 |
| Srimukundamala (Sanskrit) | 3 | 0 |

---

## திருக்குறள் பரிமேலழகருரை
குறிப்புக்களுடன்

குறைந்த விலைப்பதிப்பு அச்சிலிருக்கிறது.
விரைவில் வெளிவரும்

---

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட்
6, பவழக்காரத் தெரு, சென்னை.
தலைமை நிலையம் :: :: திருநெல்வேலி.

Reg. No. M. 1725 Feb.—March 1937



Printed by Mr. C. M. Govindarajan, at the The Progressive Printers.
Coral Merchant Street, Madras. and Published by Mr. V. Subbiah
for The S. I. S. S. W. P. Society, Tinnevelly,